வந்தேமாதரம்

# நவசக்தி

"என்கடன் பணிசெய்து கிடப்பதே"

சிலம்பு கரு | தாதுவருஷ வைகாசிமீ க.0. (12—6—1936) வெள்ளிக்கிழமை | பரல் ௪


## சிலம்பொலி

### மேல்நாடும் கீழ்நாடும்

திரு. வி. க.

இம்மண்ணுலகம் இரண்டு பெரிய நாடுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. ஒன்று மேல்நாடு. மற்றொன்று கீழ்நாடு. மேற்கிலிருப்பது மேல்நாடு. கிழக்கிலிருப்பது கீழ்நாடு. மேல்நாடு மேலே இருப்பது என்றும், கீழ்நாடு கீழே இருப்பது என்றும் கருதுகிறீரா? இப்பொழுது மேல்நாடு மேலும், கீழ்நாடு கீழும் இருத்தல் உண்மை என்று சொல்வோரிருப்பர். மேல் கீழாவதுமுண்டு. கீழ் மேலாவதுமுண்டு. இஃதொருவித நியாயம்.

* * *

மேல்நாடு முயற்சியால் மேலே செல்கிறது என்றும், கீழ்நாடு முயற்சியின்மையால் கீழே செல்கிறது என்றும் பொதுவாகச் சாதாரண மக்கள் பேசுவது வழக்கம். மேல்நாடு வெறும் பொருளாதாரத்தை அடிப்படையாகக் கொண்டு ஆகாய விமானத்தில் மேலே பறக்கிறது. கீழ்நாடு ஆத்ம ஞானத்தை அடிப்படையாகக் கொண்டு கீழே நிற்கிறது. மேல்நாட்டுப் பொருளினும் கீழ்நாட்டு ஆத்மஞானம் உரமுடையது போலும்! இப்பொழுது மேல் நாட்டுக்கு ஆத்மஞான உணர்வு தேவை. கீழ் நாட்டுக்குப் பொருளுணர்வு தேவை.

* * *

பொருளாதாரம் உலகியலுக்கு உரியதென்றும், ஆத்மஞானம் கடவுளியலுக்கு உரியதென்றும் சொல்லப்படுகின்றன. இது தவறான கொள்கை. ஆத்ம ஞானமற்ற பொருள்நிலையும், பொருளற்ற ஆத்ம ஞானமும் வாழ்வை வளஞ் செய்யா. வாழ்வுக்கு இரண்டும் இன்றியமையாதன. ஒன்றை ஒன்றினின்றும் பிரிப்பது வாழ்வுக்கு இடர் தேடுவதாகும். தற்கால உலகம் இரண்டையும் தனித்தனியே பிரித்து இடர்ப்பட்டு வருகிறது.

* * *

மேல்நாடு வெறும் பொருளாதாரத்தையே பொருளாக் கொண்டமையால், அஃது எந்த நேரமும் போர் முனையில் நிற்பதாயிற்று. மேல்நாட்டுச் சரித்திரம் இதற்குச் சான்று கூறும். அங்கே மக்கள் உழைப்பெல்லாம் பெரிதும் போருக்கே பயன்படுகின்றன. போர் வீரர் கூட்டமும், பீரங்கிகளின் ஈட்டமும், ஆகாய விமானங்களின் ஆக்கமும், நீர் மூழ்கிகளின் தேக்கமும், விஷப்புகையின் பெருக்கமும் மேல்நாட்டு வாழ்வுச் செல்வங்களாகக் கருதப்படுகின்றன. அந்நாட்டில் மக்கள் உழைப்பு மூர்க்கமாய்ப் பரிணமிக்கிறது; அவர்கள் உணர்வு இயற்கையில் - காவியத்தில் - ஓவியத்தில் - செல்வதில்லை.

* * *

கீழ்நாட்டில் பொருளாதார மற்ற ஆத்ம ஞானத்தால் - வறுமை - பிணி - அகால மரணம் - முதலியன பெருகிக் கொண்டிருக்கின்றன. போலி ஆத்ம ஞானப் பெருக்கால் நிலையாமைப் பேச்சு அதிகமாகிவிட்டது. உலகநிலையாமை, உடல் நிலையாமை முதலிய நிலையாமைகள் வாழ்வுக் குரியனவாகக் கொள்ளப்படுகின்றன. இளமையிலேயே உலக நிலையாமையும், உடல் நிலையாமையும் போதிக்கப்பட்டால், மக்களின் பின்னை வாழ்வு என்னாகும்? வாழ்வு முழுவதும் சோம்பலுக்கே இரையாகுமன்றோ?

* * *

கீழ்நாட்டில் ஆத்மஞானம் என்னும் பெயரால் கோடிக்கணக்கான சோம்பேறிகள் திரிகிறார்கள். இவர்கள் ஆத்மஞானிகளல்ல. ஆத்மஞானத்துக்கும் இவர்கட்குந் தொடர்பேயில்லை. கீழ்நாட்டில் ஆத்ம ஞானம் என்பது பொருளற்றுக் கிடத்தல் வெள்ளிடைமலை. உண்மை ஆத்மஞானம் உலவுமாயின் நாடு இந்நிலையிலிராது. ஆத்மஞானம் பொருளுடையதாய் இயங்கிய காலை நாடு எந்நிலையிலிருந்தது? முனிவரிடத்தில் அஞ்சாமையும், மன்னரிடத்தில் வீரமும், வாணிபரிடத்தில் அறமும், விவசாயிகளிடத்தில் உண்மையும் விளங்கி நின்றன. இப்பொழுது இவ்வரும்பெருங் குணங்களெல்லாம் நாட்டில் நிலவுகின்றனவா? அவை எங்கே போயின? உண்மை ஆத்மஞானம் பொன்றி, வெறும் போலி உலவுதலால் நறுங் குணங்கள் மாண்டொழிந்தன. காரணமென்னை? பொருளாதாரத்தை அடிப்படையாகக் கொண்ட ஆத்மஞானம் பரவாமையேயாகும்.

* * *

பொருளுக்கும் ஆத்ம ஞானத்துக்கும் தொடர்பில்லை என்று கூக்குரலிடுவது அறியாமை. பொருளும் ஆத்ம ஞானமும் உடல் உயிர் போன்றன. பொருளாதாரம் ஆத்ம ஞானத்துக்கு மாறுபட்டது என்று கூறுவோர் என் உடலுடன் வாழ்கிறார்? அவர்கள் உடலை விடுத்து உயிருடன் உலவலாமன்றோ? அவர்கள் உணவு முதலியன ஏன் கொள்கிறார்கள்? பொருளின்றி உணவு முதலியன யாண்டிருந்து கிடைக்கும்? உடலுடன் வாழ்ந்தும் - உணவு முதலியன கொண்டும் - பொருளாதாரம் அநாவசியம் என்று புகல்வது அறிவுடைமையாகாது. பண்டை மூதறிஞர் நமக்கு ஈந்துள்ள நன்னூல்களில் பொருளாதாரம் பேசப்பட்டேயிருக்கிறது. அறம் பொருள் இன்பம் என்னும் ஆட்சியின் நுட்பம் என்னை? அறத்துக்கும் இன்பத்துக்கும் இடையில் பொருள் மிளிர்வானேன்? தொல்காப்பியத்திலுள்ள பொருளதிகாரம், திருக்குறளிலுள்ள பொருட்பால் முதலியன என்ன போதிக்கின்றன? நேயர்கள் உன்னுவார்களாக. "முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னால் முடியுமன்றே" என்னும் மணிமொழியும் ஈண்டுச் சிந்திக்கற்பாலது.

தற்கால மேல்நாடும் கீழ்நாடும் தத்துவத்தில் ஒன்றுடன் ஒன்று ஒவ்வாது நிற்பதால் மக்கள் கூட்டத்துக்கு நலன் விளைவதில்லை. ஆத்மஞானமற்ற வெறும் பொருளாதாரத்தால் மேல்நாடு போருக்கு இரையாகிறது. பொருளாதாரமற்ற போலி ஆத்ம ஞானத்தால் கீழ்நாடு சிறுமையுறுகிறது. மேல்நாட்டை ஆசை என்னும் பேய் அரிக்கிறது. கீழ்நாட்டைச் சோம்பல் என்னும் நோய் பாழ்படுத்துகிறது. இரண்டும் நல்வழியில் நிற்றல் வேண்டும். இவ்வுலக வாழ்வுக்குப் பொருளும் ஆத்மஞானமும் தேவை என்பதை இரண்டு நாடும் உணர்தல்வேண்டும்; உணர்ந்து ஒன்றி வாழ்ந்தால் உலகம் நலனுறல் உறுதி.

* * *

இப்பொழுது மேல் நாட்டுக்குச் சோதனை நேர்ந்திருக்கிறது. வேண்டுவது போரா அமைதியா என்று இயற்கை அன்னை கேட்கிறாள். சர்வதேசசங்கம் என்ன பதிலிறுக்கும்? நெப்போலியன் தொடங்கிய போராட்டம் இன்னும் முற்றுப்பெறவில்லை. எதற்கும் ஓரெல்லையுண்டு. உலகாயுதப் போராட்டம் வளர்ந்து கொண்டே போகாது. என்றாதல் ஒருபோது அது முடிவடைந்தே தீர்தல் வேண்டும். முடிவு சேய்மையிலில்லை; அண்மையிலேயே இருக்கிறது. முஸோலினிகளும், ஹிட்லர்களும் பெருகப்பெருக போராட்டம் வீறிட்டெழுந்து சண்ட தாண்டவம் புரிந்து சாய்ந்து வீழும்.

* * *

முஸோலினி அபிஸீனியாமீது போர் தொடுத்தனான்றே - உலக யுத்தமும் தொடங்கியது - என்று அறிஞர் கருதினர். முஸோலினியும் ஹிட்லரும் இப்பொழுது உறவு கொண்டாடுகிறார். அவர் தேசமும் இவர் தேசமும் உடன்படிக்கை செய்துகொள்ளும் போலும்! பிரான்ஸும் ருஷ்யாவும் முன்னரே உறவாடின. பிரான்ஸில் சமதர்மஅரசு இப்பொழுது ஏற்பட்டிருக்கிறது. ஜப்பான், இங்கிலாந்து, அமெரிக்கா முதலியன இப்படியும் அப்படியும் விழிக்கின்றன. ஒவ்வொன்று ஒவ்வொரு பக்கத்தில் சேர்ந்தே தீரும். வேறுவழியில்லை.

* * *

வல்லரசுகளுக்குள் பிளவு நேர்ந்து போர் மூளுமாயின் உலகம் என்ன பாடுபடும்? அந்தோ! சொல்லவும் வேண்டுமோ? அந்நிலையை உள்ளக் கண்ணால் நோக்கிப் பார்த்தால் அது நன்கு புலனாகும். ஒவ்வொரு நாட்டின் ஆசைப்பேயினின்றும் உருக்கொண்டுள்ள குண்டுகளும், பீரங்கிகளும், போர்க் கப்பல்களும், நீர்மூழ்கிகளும், விமானங்களும், விஷப் புகைகளும் அழிதல் வேண்டாமா? எத்துணை எத்தனை கோடி கோடிப் பொருள்களை அப்பேய்கள் சாப்பிட்டிருக்கின்றன! அவைகள் ஏழை மக்கட்குப் பயன்பட்டிருக்குமாயின் எண்ணமேயா வறாதன்றோ? மனிதன் ஆசை என்னென்ன செய்கிறது? கொடுமை! கொடுமை!

* * *

இந்த நிலைமையிலும் வல்லரசுகள் ஆசையென்னும் பேயினின்றும் விடுதலையடைய உன்னுவாராயின், போரொழிந்து அமைதி நிலவும். இதை வல்லரசுகள் எண்ணின் அவை நல்லரசுகளாகும். வீண் சண்டை எற்றுக்கு? வீண் கொலை எற்றுக்கு? மன்பதை ஏன் துன்புறல்வேண்டும்? போர் மூண்டெழுந்து நடைபெற்ற பின்னை விளையப் போவதை இப்பொழுதே எல்லாரும் ஒன்று சேர்ந்து விளைவித்த லாகாதோ? போருக்குப் பின்னை விளையப்போவதென்னை? வல்லரசுகளின் ஆயுத பலமெல்லாம் ஒழிந்து திமிர் அழிந்தால், அவைகளின் மனம் ஆத்மஞானத்தில் சென்று ஆசைப்பேயை ஓட்ட அவைகள் எண்ணும். அவ்வெண்ணம் சமதர்மமாகவே பரிணமிக்கும். இதுவே சண்டைக்குப் பின்னை விளையப்போவது. சண்டைக்கு முன்னரே அறிவால் ஏன் இதைச் செய்துகொள்ள லாகாது?

* * *

மக்கள் பண்டை நாளில் இயற்கையோடியைந்து வாழ்ந்த நாளில், அவர்கள் வழிச் சமதர்மம் வளர்ந்தே வந்தது. மக்கள் இயற்கையை மறந்து செயற்கையில் தலைப்பட்ட நாள் தொட்டு, அவர்கள் கருத்து ஏகாதிபத்தியத்தில் படியலாயிற்று. அப்படிவு, தற்காலப் போராட்டத்தை எழுப்பி யிருக்கிறது. இதைச் சரித்திரத்தால் உணரலாம். சரித்திர அநுபவங்கொண்டு நிலைமையை நன்கு உணர்ந்து போரில் கருத்துச் செலுத்தாது சமாதானத்தில் கருத்துச் செலுத்துவது சிறப்பு. எல்லா வல்லரசுகளும் ஒன்றுபட்டு நிலைமையை ஆராய்ந்து தெளிந்து சமதர்ம வழி நிற்க ஒருப்படுதல் நலம். எல்லாத் தேசமும் சமதர்ம மயமாய்விடின், உலகம் சாந்த மயமாகும். பழைய இயற்கை வாழ்வு மீண்டும் உயிர்பெறும். காவிய உணர்வும் ஓவிய உணர்வும் பெருகும். காவிய உணர்விலும் ஓவிய உணர்விலும் அமைதி நிலவுதல் இயல்பு. எங்கணும் சாந்தத்துக்குரிய ஆத்மஞானம் இடம் பெறும்.

* * *

மகாத்மா காந்தி உலகுக்கு விடுத்துள்ள செய்தி என்ன? சாந்தம் - சாந்தம் - என்பது. அச்சாந்த வாழ்வு பெறுதற்குரிய வழிகளையும் அடிகள் கோலியுள்ளார்; அவ்வழியில் தாம் நின்று ஒழுகியும் வருகிறார். அவர்தம் இயற்கை வாழ்வின் போதனையும் சாதனையும் உலகுக்குத் தேவை. மகாத்மா காந்தியின் போதனையும் சாதனையும் பொருளாதாரத்தை அடிப்படையாகக் கொண்ட ஆத்ம ஞானத்தின்பாற்பட்டன என்பது கருதற்பாலது. காந்தியடிகளின் சர்க்கா - சிறு ராட்டை - பொருளாதார ஆத்ம ஞானத்துக்கு

# மகாத்மா காந்தியின் எச்சரிக்கை

## அத்தாட்சியின்றிக் கதர்விற்பனை

அகில இந்திய நூற்போர் சங்கத்தின் அத்தாட்சி பெறாமலே அத்தாட்சி பெற்றதாகக் கொண்டு விற்பனைசெய்து வரும் வியாபாரிகளைப்பற்றி மகாத்மா காந்தி பின்வருமாறு எழுதுகிறார்:—

அகில இந்திய நூற்போர் சங்கத்தின் பேரால் கையால் நூல் நூற்போருக்கு அளிக்கப்படும் கூலியைச் சிறிது அதிகமாக்கியதாலும், சில கதர் வகைகளின் விலையை உயர்த்தியதாலும் பல கதர் வியாபாரிகள் தாங்கள் அகில இந்திய நூற்போர் சங்கத்தின் அத்தாட்சி பெறாமலே பெற்றிருப்பதாகச் சொல்லிக் கதர் விற்பனை செய்கிறார்கள். பலர் மனிதத் தன்மைக்கு ஏற்காத தேசத்துரோகமான செய்கையைச் சாதித்துக் கொள்ள, அகில இந்திய நூற்போர் சங்கம் ரிஜிஸ்தர் செய்யப்பட்ட ஸ்தாபனமல்ல என்று சிறிதும் ஆலோசியாது கூறப் பின் வாங்குவதில்லை. ஸ்ரீ இராஜகோபாலாசாரியார், சட்டப்படி உண்மையான விஷயத்தை அறியவிரும்பினர்; தமது பழமையான சட்ட அநுபவத்தோடு நில்லாமல் சென்னையிலுள்ள ஒரு பிரபல வக்கீலின் அபிப்பிராயத்தையும் கலந்து கொண்டார். இதுவே அவரது முடிவான அபிப்பிராயம்:—

"திருப்பூர் வர்த்தகர்கள் சட்டத்திற்கு மாறாக ஆலோசனை கூறப்பட்டிருக்கிறார்கள். ரிஜிஸ்தர் செய்யப்பட்ட ஸ்தாபனங்களுக்கு ஆதரவளிப்பது போலவே ரிஜிஸ்தர் செய்யப்படாத ஸ்தாபனங்களுக்கும் சட்டம் ஆதரவளிக்கிறது. சட்டப்படி ரிஜிஸ்தர் செய்து கொண்டாலும் இந்தக் கடைகள் பொது ஜனங்களை ஏமாற்றுவனவேயாகும். ஒருஸ்தாபனம் ரிஜிஸ்தர் செய்யப்படாததாகஇருந்தால் அதன் பெயரால் மற்றவர்கள் வியாபாரம் செய்வது பெரிய தவறு. சட்டம் ஏற்படுத்தவும், நஷ்ட ஈடுகேட்கவும் வழக்குத் தொடரவும் இடமேற்படும். சட்டத்தடை உங்களுக்கு ஏற்பட்டுவிடும். ஆனால்நஷ்டஈடு, அ. இ. நூ. சங்கத்தின் பொருள்களென நம்பி வாங்கியவர்களின் சாட்சியத்தின் பேரில்தான் கிடைக்கும். அந்தப் பிரபல வக்கீல் சென்னை மாஜி அட்வகேட் ஜனரல் ஸ்ரீ. டி. ஆர். வெங்கடராம சாஸ்திரியாரே. ஆகவே, அ. இ. நூ. சங்கத்தின் அத்தாட்சி பெறாமலே, அத்தாட்சி பெற்றதாக விற்பனை செய்வது ஏமாற்றுவதேயாகுமென்று நிரூபிக்கப் பட்டு விட்டதால் அவ்வாறு விற்பவர்கள், இனி அத்தகைய செயலை விட்டு விடுவார்களாக.

கோர்ட்டுகளில்சென்றுவழக்காடுவது என் கொள்கைக்கு விரோதமாக விருந்தாலும், ஏழை வாயில்லாச் சகோதரிகள் சார்பாக சட்ட நடவடிக்கை எடுத்துக்கொள்ளுமாறுஆலோசனைகூற நான் தயங்கமாட்டேன்.

---

அறிகுறி. உலகம் இதை உணர்வதாக. உணர்ந்தால் உலகம் உய்யும். இல்லையேல் உலகம் பாழ்படும். சர்வதேச சங்கம் காந்தியடிகளை யழைத்து வேண்டுவ செய்யலாமன்றோ? செய்ய முன் வருமா?

* * *

ஆத்மஞானம் வாழ்வின் ஜீவாதாரம். அதினின்றும் கல்வி,தொழில்,பொருள், அரசு, நாகரிகம் முதலியன அரும்பி எழுதல் வேண்டும். ஆத்ம ஞானத்தினின்றும் எழாத கல்வி முதலியன வெறும் பாழேயாகும். ஆகவே ஆத்மஞானக் கல்வி முதலியன யாண்டும் பெருக மக்கள் முயலுதல் வேண்டும். அப்பெருக்கு ஏகாதிபத்தியஉணர்வைப் போக்கிச் சமதர்ம உணர்வை ஆக்கும் என்பதில் ஐயமில்லை. எங்கணும் ஆத்மஞான உணர்வு ஓங்க.

# செஞ்சிக் கோட்டை

(திரு. தை. ஆ. கனகசபாபதி முதலியார்)

(உரிமை ஆக்கியோர்க்கே)

நந்தமிழ் நாட்டிற் பண்டை நாளிற் பல்வளங்களோங்கித் திகழ்ந்த நகரங்கள் பலவற்றுள்ளும் செஞ்சி நகருமொன்றென்பதை அறியாதார் ஒருவருமிலர். அந்நகர், ஒருகால் ஜயசிங்கு மன்னர் முதலியோர் ஆட்சிக்குட்பட்டு விளங்கிற்று. அதன் எல்லைக்குள் வடக்குத் தெற்காகத் தெளிந்த நீருடைய ஆறொன்று,எருமையன்ன கருங்கற்கள் இடையிடையே அமையப் பெற்று அழகிய தோற்றத்தோடு பாய்கிறது. அதனைக் கடந்து சிறிது தூரம் செல்லின், பல கட்டடங்களைத் தங்கள் உச்சியிற் கொண்ட இரண்டு மலைகள் தோன்றுகின்றன. அம்மலைகளை நோக்கிச் செல்லும்வழியில் இடையிடையே அழகிய வீடுகளையும் பச்சைப்பசேரென்ற வயல்களையும் பார்த்துக்கொண்டே போவோமானல், பெரிதும் தூர்ந்து, உடைந்த கரைகளை இருமருங்கும் பெற்று, அற்பப் பிராணிகளும் அசட்டை செய்யும் ஆழமுடைத்தாய்ப் பாழே உருவெடுத்தாற் போன்றதோரகழியைக் காணலாம். அதனைச் சார்ந்து அகன்றுயர்ந்து அழிவுற்ற உறுப்புக்கள் பல கொண்டு, வடக்குத் தெற்காகச் சென்று இரண்டு மலைச்சரிவுகளைச் சேர்க்கின்ற கோட்டைச் சுவரொன்று, படுகாயப் பட்டும் வீரங் குன்றா வீரனே போன்று நிற்கின்றது.

அச்சுவரில் அமைந்துள்ள வாயிலைக் கடந்து உட்சென்றதும் வலப்பக்கம் இராசகிரி என்று கூறப்பெறும்ஒருசிறு மலை, மக்கள் தன்உச்சியை அடைதற் பொருட்டு அமைக்கப்பட்டுள்ள மூன்று வழிகளுடன் சற்றேறக்குறைய 370 அடி உயரமுடையதாய் விளங்குகின்றது. அம்மலையின் படிகள் யாவும் செம்மையாக அமைந்துளவேனும், பெரிதும் மனிதர் போக்கின்மையால் போவார்க்குப் பெருந் துன்பத்தை விளைக்கின்றன. உச்சியிற் சபாமண்டபமொன்று, அரசர் அமர்வதற்கு ஓரழகிய மேடையையும் நான்கு பக்கங்களில் நான்கு திண்ணைகளையும் பெற்று ஓங்கியுயர்ந்து காண்பார் மனதைக் கவர்கிறது. அவ்வழகிய மண்டபத்திற்கருகில் நாற்றிசையும் அழிவுற்று இருட்டிற்கிருப்பிடமாய், ஆந்தையும் கழுகும் அழுதற்கமைந்த வீடேயாய், கோ இன்றியுங் கோயிலெனப் பெயரளவி லிருக்கும் ஆலயமொன்றைக் காணலாம். அதன் பக்கலொரு நீர்ச்சுனை பண்டு மக்கட்குப் பெரும்பயன் அளித்து இன்று கருதுவாரின்றியிருக்கின்றது.

ஒருபால் ஏறக்குறைய 70 அடி நீளமும் 37 அடி அகலமும் 30 அடிஉயரமுமுள்ள ஒரு பெரிய கட்டடம், அங்குப் போவாரைத் தன்னிடம் வருகவென்றழைப்பது போன்று உயர்ந்திருக்கின்றது. அப்பெருங்கட்டடத்திற்கு அமைந்த சுவர்கள் நான்கோடு குறுக்குச் சுவரைச் சார்ந்து அதற்குட் பக்கத்தில் மேலேறுதற் கென்று கட்டப்பட்ட சுமார் 2 அடி நீளமுள்ள படிகள் உள்ளிருப்பார்க்குத் தோன்றுதவாறு எழுப்பப்பட்ட ஐந்தாஞ் சுவரொன்றுமுண்டு. அச்சுவர்களுக்கு மேல் வானம் கவிந்தாற்போன்ற ஒரு பெரிய வளைவுப்பதுங்கு வேறுதாவின்றிப் பொருந்தி இருக்கின்றது. அக்கட்டடத்துள் பொருந்துதற்கு இரும்பும் மரமும் தவம் செய்தில. ஏறக்குறைய $2\frac{1}{2}$ அடி அகலமும் 6அடிஉயரமுமுள்ள ஒரு வாயிலும், உத்தேசம் 2அடி அகலமும் 6 அடி உயரமுமுள்ள ஒரு படிவாயிலுமன்றி, சற்றேறக்குறைய 3அடி அகலமும் 2அடி உயரமுமுள்ளஇரண்டு பலகணிகளும், மேற்பதுங்கில் சுமார் $1\frac{3}{4}$ அடி நடு அளவுள்ள ஒருவட்டமான துவாரமும் அக்கட்டடத்தில் காணப்படுகின்றன.அதனருகில்கவனிப்பாரின்மையால் மேற்பதுங்கில் பெரும் பிளவுள்ள மேற்கூறிய அளவுள்ள கட்டடமொன்று இருக்கின்றது. அதனை ஒரு சுவர் இரண்டறைகளாகப் பிரிக்கின்றதெனினும், அது பதுங்களவு உயர்த்தப்படவில்லை. அச்சுவர் அரசாங்கத்தாரால் சில வருடங்களுக்குமுன் மேற்பதுங்கைத் தாங்குதற்கென்று எழுப்பப்பட்டதென்றும், யாதோ தடையால் அது இடையே நிறுத்தப்பட்டதென்றும் அந்நகர மக்கள் கூறுகின்றார்கள். இவைகளே யன்றிச் சில சிறு கட்டடங்களும் அழிவுற்றிருக்கின்றன.

மலையை விட்டுக் கீழிறங்கிச் சிறிது தூரம் செல்லின்,இராணி கிரியை நோக்கிச் செல்லும் வழியில் அரசர் அந்தணர் வணிகர் வேளாளர் எனும் நாற்பாற்பட்ட மக்கள் இருத்தற்கு இடமாய் நின்றழிந்த மாளிகைகளின் சின்னங்களைக் காணலாம். சில கஜங்களுக்கப்பால் மலைமீதேற முதலாக நுழைதற்கென்று பொருந்திய வாயில்முன் ஓர் அகழி மலையைச் சார்ந்து செல்கின்றது. அவ்வாயிலுக் கெதிரில் நன்னிலையில் ஒரு மசூதி ஜயசிங்கு மன்னர்க்குப் பின்னிருந்த மகமதியர் காலத்தில் கட்டப்பட்டு, இன்றும் புதிய நிலைமையிலிருக்கின்றது. ஆயினும் அது உபயோகிப்பாரின்மையால் வெகு சீக்கிரத்தில் அழிவுற்றுச் சிதைந்தழிந்த மற்றவைகளோடு ஒன்றாக வைத்தெண்ணும் தன்மையை அடையும் என்பதற்கோர் ஐயமில்லை. அதனருகில்ஆலயமொன்று பாழ்பட்டு மனிதர் போக்கின்றி, நாய்க்கும் நரிக்கும் அமைந்த வீடாய் இருக்கக் காணலாம். அதற்கு அரணாக நாற்றிசையும் நான்கு பெருமதில்கள் உயரமும் பலமும் பெற எழுப்பப்பட்டிருக்கின்றன.ஆயிரக்கால் மண்டபமொன்று, மேற்பாவியிருந்த கற்கள் பல கீழ்ச் சரிந்தும் கால்கள் பல பூமியிற் புதைந்தும் சீர்குலைந்திருக்கின்றது. அழகிய கிணறொன்று, சூரிய கிரணம் படாநிலைமையிலும் தெளிந்தநீருடன் அழிந்த ஆலயத்தின்அழகு அடியோடு கெட்டுப் போகாதவாறு காக்கநிற்பது போன்று அகமைந்திருக்கக் காணலாம். மிகவும் விசாலமாகக் கட்டப்பட்ட அக்கோயில், ஒருசமயம் நூற்றுக்கணக்கானமக்கட்கு இடங்கொடுத்து, இன்று பயமற்று ஒருவன் தங்க இயலாத நிலைமையிலிருப்பது என்னே! தூண்களிலும் சுவர்களிலும் அழகிய சிற்பங்கள் செதுக்கப்பட்டில்லை எனினும், அவ்வாலயம் ஆதியில் சுத்தமான வேலைப்பாடமையக் கட்டப்பட்டதென்பதை எவரும் மறுத்தலியலாது. அதன் உள்ளும் புறமும் சுற்றிச்சுற்றிப் பார்ப்பினும், விக்கிரகம்ஒன்றையேனும் காண்பதரிது. அதற்கு எதிரில் ஏறக்குறைய 17அடிஉயரமும் $1\frac{3}{4}$ அடி சதுரமுமுள்ள கருங்கற் கம்பம் பல பட்டைகளுடன் விளங்குகின்றது. அதற்குக் கிழக்கில் ஒரு சிறுகட்டடமிருக்கின்றது. அதனை, மக்கள் ஆங்கிருந்த சிறைச்சாலை என்று கூறுகின்றார்கள். ஆனால், அது இப்பொழுதிருக்கும் நிலைமையால் உண்மையை அறிதற்கிடனில்லை.

இராணிகிரியின் வாயிலையடைந்துபல மதில்களைக் கடந்து உட்சென்றதும், ஒரு பெருவெளியை யடையலாம். ஆண்டுச் சற்றேறக்குறைய இருபதுக்கிருபதடிச் சதுரமுள்ள கலியாண மஹால் என்ற பெயர் பெற்ற ஒருசெங்கற்கட்டடம் ஏழு அடுக்குடன் புத்தம் புதியதாக விளங்குகின்றது. அதன் அமைப்பும் வேலைப்பாடும் முற்கூறப்பட்ட மசூதியை ஒத்திருப்பதால், அதுவும் மகமதியர் காலத்தில் கட்டப்பட்டதாகவே இருத்தல்வேண்டும். அக்கட்டடத்தில் ஒன்றின் மேலொன்றாகப் பொருந்திய அறைகள் ஏழும் தெற்குத் திசையை நோக்கியுள்ளன. கிழக்குப் பக்கமும் மேற்குப் பக்கமுமிருக்கும் சுவர்களில் இரண்டிரண்டு வாயில்கள் இருக்கின்றன. அவ்வாயில்களுக்கமைந்த படிகளின் சூழ்ச்சியை நேரிற் கண்டே அநுபவித்தல்வேண்டும். சில அடிகளுக்கப்பால் உத்தேசம் பதினேழுக்குப் பதினேழடிச் சதுரமும் 6 அங்குலம் கனமுமுள்ள சுத்தமாகத் தேய்க்கப்பட்ட ஒரு கருங்கல், ஏறக்குறைய 7 அடி நீளமுள்ள சுத்தமாகத் தேய்க்கப்பட்ட குழவியைப் பக்கலில் பெற்று விளங்குகின்றது. ஆனால், அச்சதுரக்கல் பல துண்டுகளாக உடைந்த நிலையில் இப்பொழு திருக்கின்றது. பின்னும் இராசகிரியிற் கூறிய பெரிய கட்டடத்தைப் போன்ற மூன்று கட்டடங்கள் ஒன்றாகச் சேர்த்துக் கட்டப்பட்டிருக்கின்றன. அந்நகர மக்கள் அக்கட்டடத்திலுள்ள மூன்றுஅறைகளும், நெல் கேழ்வரகு கம்பு முதலியன சேமித்து வைப்பதற்காகக் கட்டப்பட்டன என்று கூறுகின்றார்கள். இவைகளே யன்றித் தொடர்ச்சியாகச் சில சிறு கட்டடங்களும், எண்ணெய் சேமித்து வைப்பதற்காகப் பூமியில் ஒரு சிறு கட்டடமும், கொட்டடிஹால் என்கின்ற பெரியதொரு கட்டடமும் இருக்கின்றன.

பின்னர் ஏறக்குறைய 700 அடி உயரமுள்ள மலைமீதேறிப் பல நூற்றுக்கணக்கான படிகளையும் ஓரிருப்புப் பாலத்தையும் கடந்து மேற்சென்றால், மலையின் உச்சியை அடையலாம். மலைமீது சரிவான பாகங்களில் பகைவர் எளிதாக மேலேறுவண்ணம் பல சுவர்கள் எழுப்பப் பட்டிருக்கின்றன. ஆண்டு இராசகிரியின் கட்டடங்களைப் போன்ற மூன்று கட்டடங்கள் வெவ்வேறிடங்களில் கட்டப்பட்டிருக் கின்றன. ஆனால், அவைகளில் ஒன்று, பலதூண்களையும் ஓரிரும்புக் கதவினையும்பெற்று அழகாக விளக்குகின்றது. அவ்விரும்புக் கதவு சில வருடங்களுக்குமுன் அரசாங்கத்தாரால் அக்கட்டடம் பழுது பார்க்கப்பட்ட பொழுது அமைக்கப்பட்ட தென்று அங்கிருப்பவர்கள் கூறுகின்றார்கள். மற்றொரு கட்டடம், இடிந்தழிந்து பாழாய்க் கிடக்கின்றது. வேறொன்று இன்னும் வசித்தற்கு யோக்கியமாயிருக்கின்றது. பின்னும் சுமார் $10\frac{1}{2}$ அடிநீளமுள்ள ஒரு பீரங்கியும், செங்கற்களால் கட்டப்பட்ட ஒரு மணிக் கூண்டும், பாழ்பட்ட ஒரு கோயிலும், சில கட்டடங்களும், நீருள்ள மூன்று சுனைகளும் காணப்படுகின்றன. அம்மூன்று சுனைகளில் ஒன்றிலுள்ள நீர் குடித்தற்குத் தகுதியுடையதாய் இருக்கின்றது. ஒரு பள்ளத்தில் சுமார் 60 அடி நீளமும் 30 அடி அகலமுமுள்ள ஒரு செங்கற்கட்டடம்,உட்சென்று பார்க்கஇயலாத நிலைமையில் இருக்கின்றது.

தென்னாட்டின் அழகையும் பண்டைச் சிறப்பையும் தெளிவாக விளக்கும் கருவிகளில் பாழடைந்துள்ள செஞ்சி நகரும் ஒன்று. ஆதலின், தமிழரும் பிறரும் இதன் பண்டைச் சிறப்பியல்களையும் இன்றுள்ள நிலைமையினையும் நேரிற்கண்டுணரல் வேண்டுமென்பதே இக்கட்டுரையின் நோக்கம். கற்றோர்க்கும் மற்றோர்க்கும் கண்ணுக்கும் மனத்துக்கும் விருந்தளிக்கும் செஞ்சிக் கோட்டையைக் காணாது கழியும் வாழ்க்கை, தென்னாட்டிற் பிறந்தும் அந்நாட்டின் பயன் நுகர்ந்தறியா வாழ்க்கையே யாகும் என்பது திண்ணம்.





கோவையில் ஓர் ஆகாயவிமான நிலையம் ஏற்படுத்தப்படுமாம்.

o

காசியில் ஒருலட்சத்து இருபத்தொன்பதாயிரம் ரூபாய் செலவில் தலைமைத் தபாலாபீஸ் கட்டடம் கட்டப்படும்.

o

மேற்கு கிருஷ்ணா ஜில்லா காங்கிரஸ் கமிட்டியார் கிராமங்களில் காங்கிரஸ் பிரசாரம்செய்யஒரு கார் வாங்கப்போகிறாராம்.

o

கி.பி. 2600ம்வருஷத்திற்குள் மனித சமூகத்தினை செல்லாம் வழக்கைத் தலையினராகி விடுவரென ஒரு பிரிட்டிஷ் விஞ்ஞானி கூறுகிறார்.

o

ஸ்ரீமதி கமலா நேரு ஞாபகார்த்த ஆஸ்பத்திரிக்காக அலகாபாத் முனிசிபாலிடியார் ஐயாயிரம் ரூபாய் நன்கொடை யளித்திருக்கின்றனர்.

o

புனவைச் சேர்ந்த ஸ்ரீமதி சுபத்ரா பாய் என்ற ஹிந்து பிராம்மண ஸ்திரீ வக்கீலைப் புனாநகர சபையார், நகரசபை வக்கீலாக அமர்த்தி யிருக்கின்றனர்.

o

பிரிட்டனில் 14 வயதுப்பெண்களில் பாதி பேர்கள் சுயமாக சம்பாதிக்கிறார்கள். 18 வயதும் அதற்கு மேற்பட்டதுமான பெண்களில் ஐந்துபேருக்கு ஒருத்தி சம்பாதிக்கிறாள்.

o

பிரிட்டிஷ் கடற்படைகள் மால்டாவிலிருந்து சைபிரஸுக்கு மாற்றப்படாவென்று நம்பினாலும், சிறு சண்டைக் கப்பல்களையும் ஆகாயவிமானங்களையும் சைபிரஸில் சேமித்துவைக்கும் விஷயமாகச் சில தகவல்கள் விவாதிக்கப்படுமென்று தெரிகின்றது.

o

ஐக்கிய மாகாணங்களில் வாக்காளராகப் பதிவுசெய்து கொள்ள முன்வருபவர், சரித்திரம், பூகோளம், கணிதம் முதலிய பாடங்களில் பரீட்சிக்கப்படுவாராம். இந்திய அரசாங்கச் சட்டப்படி ஐக்கிய மாகாணங்களில் உள்ளவர்கள் அப்பர் பிரைமரி பரீட்சையாவது தேறியிருக்க வேண்டுமாம்.

o

ஐக்கிய மாகாண அரசியல் மகாநாடு சென்ற ஞாயிற்றுக்கிழமை ஜனுப் அகமத் கித்வாய் தலைமையில் கூடியது. பாலஸ்தீனத்தில் அரபியர்கள் சுயேச்சைக்காகச் செய்யும் கிளர்ச்சிக்கு ஆசி கூறுவதாக ஸ்ரீஜவஹர் பிரேரித்த தீர்மானம் நிறைவேறியது. இன்னும் பல தீர்மானங்கள் நிறைவேறின.

o

ஜோதிபூரில் பிரஜா உரிமைச் சங்கம் ஒன்று சமீபத்தில் ஆரம்பிக்கப்பட்டது. டாக்டர் அம்பதாஸ் ஜோஷி இதன் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார்; ஸ்ரீ. ஆர். டி. கட்டம் காரியதரிசியாக நியமிக்கப் பட்டார். ஸ்ரீ நேருவுடன் கலந்து ஒரு திட்டத்தைத் தயாரிக்கக் கமிட்டி யொன்றும் ஏற்படுத்தப்பட்டது.

o

பம்பாயிலுள்ள ஹிந்து தேசியக் கட்சியினர் பலர் ஒன்று கூடி அகில இந்திய ஹிந்து தேசியக்கட்சி ஒன்றை அமைக்க முடிவுசெய்தனர். ஹிந்துக்களின் குறைகளைக் கவனிக்கவும் பொதுவாகத் தேசநன்மையை நாடவும் இக்கட்சி உழைக்குமெனத் தெரிகிறது. இக்கட்சியின் சட்டதிட்டங்களை வகுக்க ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டது.

o

ரீடிங் என்ற இடத்திற் கருகில் பல கலைஞர்கள் கூடி பசுமாடு புஷ்டியான பால் கொடுப்பதற்குக் கையாளவேண்டிய முறைகளை ஆராய்கிறார்கள். பசுமாடு பால் கொடுக்கும் யந்திரமே என்று அந்த ஆராய்ச்சியாளர் அபிப்பிராயப் படுகின்றனர். மேனாடுகளில் அறிஞர்களின் செயற்கை முறையால் பாலின் குணம் அதிகரித்திருக்கிறது.

o

மைசூர் அரசாங்கத்தார் சென்ற 12 வருஷங்களில் குளங்களுக்காகவும் நீர்ப்பாசனவசதிகளுக்காகவும் $91\frac{1}{2}$ லக்ஷம் ரூபாய் செலவு செய்திருக்கின்றனர். சிறு குளங்களைப் பழுது பார்ப்பதற்காகச் செலவுசெய்த தொகை $13\frac{1}{2}$ லக்ஷம் ரூபாயாகும். நீர்ப்பாசன வேலைகளைச் செப்பனிட 12 லக்ஷரூபாய் செலவாயிற்றும். விவசாயிகளுக்கு $7\frac{1}{2}$ லக்ஷரூபாய் செலவுக்காகக் கொடுத்திருக்கின்றனராம்.

# கலம்பகம்

o

சூயஸ்கால்வாய் கம்பெனியின் வருஷாந்திரப் பொதுக்கூட்டத்தின் தலைவரான மார்க்கு விஸ்டிவாக் சூயஸ்கால்வாய்க்குள் செல்லும் உரிமையைப்பற்றிப் பின் வருமாறு கூறினர் :—சூயஸ் கால்வாய்க்குள் பிரவேசிக்கும் ஒருவல்லரசின் கப்பலை மற்றொரு வல்லரசு தடுக்குமானல் அது யுத்தச் செயலாகவே கருதப்படும் என்று சர்வதேசக் கன்வென்ஷன் சபையார் கூறியிருக்கிறார்.

o

ஆஸ்டிரியா நாட்டு அத்தியட்சகர் லக்ஷம்பேர் வியன்னா ஜனங்களிடையே பின் வருமாறு பேசினர்:— "ஜர்மனியுடன் சமாதானமாக வாழ்ந்து அதன் நெருங்கிய சம்பந்தத்தைப்பெற்று மறுபடியும் பழைய பெருமைகளை நிலைநாட்ட வேண்டுமென்பதே ஆஸ்டிரியாவின் போவல். தான் சுயேச்சை யாகவும், கவுரவமாகவும் நடத்தப்பட வேண்டுமென்றேதான் ஆஸ்டிரியாகேட்கிறது."

o

கோர்ட்டை அவமதித்த குற்றத்திற்காகச்சிறைத்தண்டனையடைந்திருக்கும் பஞ்சாப் மாஜி மந்திரி லாலா ஹரிகிஷன் லாலின் சொத்து 31 லட்ச ரூபாயென மதிப்பிடப் பட்டிருக்கிறது. அவரது சொத்திற்காக நியமிக்கப்பட்ட ரிஸீவர் 14 லட்சம் ரூபாய் வசூல் செய்திருக்கிறார். இழந்து விட்டதாக நினைக்கக்கூடிய இடங்களிலிருந்து வசூல் செய்யப்பட்ட மதிப்புத் தொகை 10 லட்ச ரூபாய்.

o

எதியோப்பிய சக்கரவர்த்தியின் அரசியல் தந்திரம் மிக உயர்ந்தது. அப்படியிருந்தும் காலமெப்படியாகுமோ என்று கருதி ஏராளமான தனத்தைப் பிரிட்டிஷ் பிரஞ்சு பாங்குகளில் போட்டு வைத்திருக்கிறார். அதிலிருந்து யுத்த காலத்தில் யுத்த சாமான்கள் வாங்க அதிகபாகம் எடுத்துக்கொள்ளப்பட்டது. மீதியிருப்பது சுமார் 40 லட்சம் பவுன்களுக்குமேலிருக்குமென்று மதிப்பிடப்படுகிறது.

o

ஜப்பானிலுள்ள ஓர் இடத்திற்கு, இங்கிலாந்தில் பட்டிற்குப் பேர்பெற்ற மாக்லிஸ் பீல்டு என்ற பட்டணத்தின் பெயரை ஜப்பானியர் சூட்டி யிருக்கிறார். இதனல் பட்டின் வியாபாரம் அதிகரித்திருக்கிறதாம். ரீமர் என்ற ஒரு பிரிட்டிஷ்காரர் இதையறிந்து தக்க நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளுமாறு ஜப்பான் வர்த்தக சபைத் தலைவரைக் கேட்க வேண்டுமென ஓர் அறிக்கை விடுத்திருக்கிறார்.

o

பம்பாயில் ஸர். ஸோராப்ஜி போக் கண்ணவாலாவும், மற்றும் சில பார்ஸிகளும் ஒரு திட்டத்தையாரம்பித்திருக்கிறார்கள். பார்ஸிவகுப்பில் வேலையில்லாதாரின் எண்ணிக்கையைக் கணக்கெடுப்பதும், முதல் மூன்று வருஷங்களுக்குப்பத்தாயிரம்ரூபா நிதிசேர்த்து வேலை யில்லாதாருக்குத் தொழில் முறைகளைப் போதிப்பதும், வேலை தேடுவதற்குப் பொருள் உதவி செய்வதும் இத்திட்டத்தில் காணப்படும் விவரங்களாம்.

o

முஜபர்பூர் சிறையிலிருந்த பழமையான சிவன்கோயி லொன்றைத் தரை மட்டமாக்கும்படி சிறை சூப்பிரண்டெண்ட் உத்தரவிட்டார். 14 வார்டர்கள் இவ்வுத்திரவை நிறைவேற்றுதற்காக வேலையிலிருந்து சஸ்பெண்டு செய்யப்பட்டார்கள். மேலதிகாரிகள், இவ்விஷயத்தைப்பற்றி ஆலோசித்து வந்தார்கள். பீஹார் மந்திரி பாபு நிஸ்ஸு நாராயணசிங் என்பவர் இக்கோயிலைப் பார்வையிட்டுக் கோயிலை அழிக்காதிருக்க உத்திரவிட்டார்.

o

"தேசபந்து சித்தரஞ்சனதாசர் வங்காளத்தின் முடிசூடா மன்னராக இருந்தார்; தமது உடல்பொருள் ஆவி அனைத்தையும் நாட்டிற்காக அர்ப்பணம்செய்தார். பாரதமக்கள் ஒவ்வொருவர் மனத்திலும் அவரது நினைவிருக்க வேண்டிய தவசியம். ஜூன்மாதம் 16-ந் தேதியை அவரது தினமாகக் கொண்டாடுமாறு நான் தமிழ் மக்களைக் கேட்டுக் கொள்கிறேன்" என்று தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர் ஸ்ரீ. ஜி. லட்சுமணசாமி எழுதுகிறார்.

o

எட்வர்ட் ஈ. ஸ்மித் என்பவர் ஆயிவியானுவிலிருந்து ஏராளமான கருநாகங்களைக் கொணர்ந்து மான்ட்ரீல் நகரிலுள்ள ஹோட்டல் அறையில் அடைத்துப் போஷித்துவந்தார். ஒருநாள் ஒரு நாகம் அவரைக் கடித்தது. அப்போது ஏற்பட்ட குழப்பத்தில் நாகங்கள் எல்லாம் வெளியேறின. போலீஸ் படைகள் பிறகு தருவிக்கப்பட்டன. கண்ணிற்கண்ட கருநாகங்களை யெல்லாம் சுமோறு அவர்களுக்கு உத்தரவளிக்கப்பட்டது. ஒரு மந்திர வாதியின் உதவியால் மறைந்த நாகங்கள் பிடிபட்டன.

o

சீனவில் குழப்பம்:—சென்றநவம்பர் மாதம் நான்கிங்கில் ஏற்பட்ட நாணய திருத்தத்தால் தெற்கு சீனவில் பண நெருக்கடி ஏற்பட்டதென்றும்,அதனல் பலமானகுழப்பம் எங்கும் ஏற்பட்டதென்றும், அந்நிலையைத்தணிக்க நான்கிங்பணம்கொடுத்து உதவிசெய்யுமென்றும் சொல்லப்படுகின்றன. குவாங்ஸி மாகாண சேனைத் தலைவர்களை ஜப்பானுக்கு விரோதமாகப் பலமாக நிற்கிறார்கள். குவாங்ஸி துருப்புகள் ஹோங்சோவைக் கைப்பற்றின என்றும் தந்தி சமாசாரங்கள் தடைப்பட்டன என்றும் தெரிகின்றன.

o

'காங்கிரஸ் சோஷலிஸ்ட்' பத்திரிகையில் ஓர் அரிய செய்தியை ஒருநிருபர் வெளியிட்டிருக்கிறார். ஜர்மனியில் ஒரு கிராமத்திற்கு இவர்சென்றபோது அக்கிராமத்தார் இவரைக் 'காந்தி' என்றழைத்தது. 'இந்தியாவில் காந்தியைஅறியாத கிராமவாசி உண்டா?' என்றுகேட்டார்களாம். அதற்கு இவர் ஸ்ரீமான். வி. எப். ஆண்ட்ரூஸ் செய்தத்திரையில் இந்திய கிராமமொன்றில் காந்தியைப் பற்றி அறியாதவர் ஒருவரை அவர் சந்தித்ததாகக் கூறி 'அக்கிராமவாசி பிறப்பிலேயே ஊமைச் செவிடு; அவருக்குப் படிக்கவும் தெரியாது' என்றார்.

o

"கல்கத்தாவிலும் பம்பாயிலும்உள்ள மூன்று முக்கிய புஸ்தகசாலை அதிகாரிகள் விற்பனைக்காக ஜவஹர்லாலின் சுய சரிதப்புத்தகம் வேண்டுமென்று எழுதியிருந்தார்கள். தணிக்கையதிகாரிகள்புத்தகசாலைச் சொந்தக் காரர்களிடம் சென்று அப்புத்தகங்களுக்காக ஆர்டர் செய்யாமலிருக்குமாறு கூறியதாகத் தெரிகிறது. இது உண்மையானல் அதிகாரிகள் தங்கள் அதிகாரத்தினை அநியாயமாகத் துர்வினியோகம் செய்ததாகும்" என்று 'லீடர்' பத்திரிகையின் லண்டன் நிருபர் எழுதுகிறார். இதைப் பற்றிப் பார்லிமெண்டில் கேள்வியும் எழும்.

o

குழந்தைகள் வெளியே போனல் எங்கே வண்டியில் அகப்பட்டுக்கொள்வார்களோ? என்ன நேருமோ என்று பேற்றோர்கள் இனிமேல் கவலைப்பட வேண்டாம். கல்கத்தா நகரசபையார் ஒரு புதுஉத்திரவு பிறப்பித்திருக்கின்றனர். இதன்படி குழந்தைகள் சாலையைக் கடக்கவேண்டுமானல் போலீஸ்காரனுக்கு அருகில் போய்நிற்கவேண்டும். உடனே எல்லாத்திசைகளிலும் சிவப்புக்கைகள் காட்டப்படும். அதனல் வண்டிகள் அங்கங்கே நின்றுவிடும். குழந்தைகளும் பயமின்றிப் பாதையைத் தாண்டிச் செல்வார்கள். இந்தத் திட்டம் வெற்றி யளித்தால் எங்கும் அநுஷ்டிக்கப்படலாம்.

o o o

தும்கூருக்கு அருகிலுள்ள நாவங்கலா என்றஇடத்தில் ஒரு மாரியம்மன் கோவில் உள்ளது. ஜனங்கள் அந்த மாரியம்மனுக்கு எருமைக்கடா பலி கொடுத்து விழாநடத்துவார்கள். இந்த பலிக்கடா சிலவருஷங்கள் முன்பே சுயேச்சையாக அவிழ்த்துவிடப்படும். இரண்டொரு வருஷங்களில் இந்த எருமை ஊருக்குத்திரும்பும். உடனே ஜனங்கள் உத்சவம் நடத்த ஆரம்பிப்பார்கள். பலியிடுவதற்கு அந்த எருமையை ஒருவரும் பிடித்து வரமாட்டார்; அது தானகவே பலி பீடத்துக்கு வருமாம்.ஆனல் இவ்வருடம்வழக்கத்துக்கு விரோதமாகஎருமை தப்பிஓடிவிட்டது. இதனல் ஜனங்களிடைப் பரபரப்பு ஏற்பட்டிருக்கிறது. உத்சவம்நடத்துவோர் ஜனங்களின் பழிக்கு ஆளாகிவிட்டனர். இந்த விழாவிற்கு 5000 ஜனங்கள் கூடியிருந்தார்கள்.

o o o

ஆலப்பிழையில் சீக்கிய மதத்தைத் தழுவிய தீயர்களிடமிருந்து கிர்பான்கள் பிடுங்கப்பட்டது சம்பந்தமாக சீக்கிய மதப்பிரசார சங்கக் காரியதரிசி ஸ்ரீ தயால்சிங் சென்ற திங்கட்கிழமை ஆலப்புழை ஜில்லா மாஜிஸ்ரேட்டைச் சந்தித்துப் பேசினர். இந்த சமாசாரத்தில் திருவாங்கூர் அரசாங்கத்தார் உத்தியோக தோரணையில் ஒன்றும் செய்ய இயலவில்லை யென்றும், போலீசாரின் செய்கை பொறுப்பற்றதென்றும் ஜில்லா மாஜிஸ்திரேட் கூறியதாக ஸ்ரீ தயால் சிங் சொன்னர். ஸ்ரீசிங் போலீஸ் உதவிசூப்பிரண்டெண்டைச் சந்தித்தப்பொழுது இச் செய்கைக்கு அவர் மிகவருந்திப் போலீசார் சந்தேகத்தின் பேரிலேயே கிர்பான்களைப் பிடுங்கிய தாகவும் தெரிவித்தாராம். கிர்பான்கள் சொந்தக் காரர்களிடம் திருப்பி யளிக்கப்பட்டன.

## சுபாஷ் போஸ் ஹிந்தி கற்பார்

ஸ்ரீ சுபாஷ் சந்திரபோஸ் குர்லாங்கிலிருந்து 'லோகமான்ய' பத்திரிகையின் ஆசிரியருக்குப் பின்கண்ட கடிதத்தை வரைந்திருக்கிறார் :—

"இங்கிருக்கும் பொழுதே நான் எனது ஹிந்தி பாஷா ஞானத்தை விருத்திசெய்ய விரும்புகிறேன். சென்ற சில வருஷங்களில் ஹிந்தி பாஷையில் நான் ஒன்றும் தேர்ச்சி பெறவில்லை. பிழையின்றி ஹிந்தி கற்கக் கூடிய புத்தகங்கள் சிலவற்றை எனக்குத் தெரியப் படுத்தவும்."

## திருவள்ளுவர் திருநாள்

சென்னைத் திருவள்ளுவர் திருநாட் கழகத்தின் ஆதரவில் பச்சையப்பன் மண்டபத்தில் திருவள்ளுவர் திருநாள் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. மகாமகோபாத்யாய டாக்டர் ஸ்ரீ உ. வே. சுவாமிநாதய்யர் தலைமை வகித்தார். பல அறிஞர்கள் பேசினர்கள்.

தென்காசித் திருவள்ளுவர் கழக ஒன்பதாம் ஆண்டுவிழா "நவசக்தி" ஆசிரியர் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் தலைமையில் செவ்வனே நடைபெற்றது.

திருநெல்வேலியில் திருவள்ளுவர் திருநாள் கொண்டாடப்பெற்றது. திருநெல்வேலி ஜில்லா ரிஜிஸ்திரார் ஸ்ரீ ஞானதேசிகம் பிள்ளை தலைமை வகித்தார்.

வேலூரில் ஸ்ரீ திருவேங்கடானந்த ராசிரமத்தில் திருவள்ளுவர் திருநாள் கொண்டாடப் பட்டது. திருவையாறு ஸ்ரீலஸ்ரீ சிதம்பர சுவாமிகள் தலைமை வகித்தார்கள்.

## தொழிலாளர் சங்க உலகம்

லேபர்' பத்திரிகையில் சர்வதேசத் தொழிலாளர் சங்கச் சம்மேளனத்தின் பொதுக் காரியதரிசி ஸ்ரீ. வால்டர்ஷிவனல்ஸ் என்பவர் பின் வருமாறு எழுதியுள்ளார் :—

ஜனசமூகங்களின் மனப்பான்மையிலும், கொள்கையிலும், பொருள்நிலை ஒழுங்குகளிலும் யுத்தத்திற்குப் பின் உலகில் ஒருமகத்தான புரட்சிதோன்றியிருக்கிறது. அது உலகின்கண்-முக்கியமாக ஐரோப்பிய தேசங்களில் - பெரிய மாறுபாடுகளைச் செய்திருப்பதன்றித் தொழிலாள ரியக்கத்தின் காரியங்களையும் முற்றிலும் மாற்றிவிட்டது. யுத்தத்திற்கு முன் சர்வதேசத் தொழிலாளரியக்கம் செய்த தொண்டுகள் எவை? பலதேச சங்கங்களுக்குள் நட்பைவளர்த்தல்-கூலிகள், வேலைநிலைமை, நிபந்தனைகள் முதலியவற்றில் பலதேசங்களிலுமுள்ள நிலைமைகளை ஒத்திட்டுப் பார்த்தல் - தொழிலாளரைப்பற்றிய பெரிய சண்டைகளில் பரஸ்பர பண உதவி செய்தல் - ஆகிய இவை போன்ற காரியங்களே. யுத்தத்திற்குப் பிறகு இந்த இயக்கக்காரியங்கள் எல்லையின்றி வளர்ந்தன. அரசியல் சம்பந்தமானதென்று முன் ஒதுக்கியிருந்த பல பிரச்னைகளை-யுத்தம் முடிந்தபிறகு சில காலத்திற் குள்ளேயே சர்வ தேசத் தொழிலாளர் சம்மேளனம் கவனிக்க வேண்டிய அவசிய மேற்பட்டது. சாதாரணமாக ஏற்படக்கூடிய தொழிலாளர் சங்கக்காரியங்களைத்தவிர வேறு பல விசேஷங்களும் சம்மேளனத்தின் கவனத்தை ஈர்த்தன. அவற்றுள் பல முக்கிய விஷயங்கள் வருமாறு:— யுத்தத்தில் பாழான பிரதேசங்களைப் புதுப்பித்தல், யுத்தக் கடன், சமாதானமும் ஆயுதப் பரிஹாரணமும், சர்வதேச சம்பந்தமான தனமும் நாணயவாரிப் பிரச்னைகளும், சர்வதேச சமூகசம்பந்தமான சட்டங்கள், சர்வதேசத் தொழிலாளர் காரியாலயத்துடன் அதிகாரிகளும் நிலையாகக் கலந்து கொள்ளுதல் ஆகிய பல.

### யுத்தத்துக்குப் பின்

யுத்தத்திற்குப் பிறகு ஐரோப்பியத் தொழிலாளர் சங்க இயக்கம் மிகவேகமாக வளர்ந்து தொழிலாளர்நலன்களைக் காத்து, அவர்கள் சார்பில் மிக அவசரமான பிரச்னைகளிலும் செல்வாக்குச் செலுத்தி வந்தது. இந்த வேகத்திற் கேற்றவாறு சர்வதேசத் தொழிலாளர் சம்மேளனமும் தன் பொறுப்புகளை ஒழுங்கு படுத்திக் கொள்ள வேண்டியதாயிற்று. ஆயினும் அதனுல் அது தன் பிரசாரத்தை உலகில் ஒவ்வொரு மூலைமுடுக்கிலும் செய்வதைக் குறைத்துக் கொள்ள வில்லை. இப்போது தாராளமாகத் தொழிலாளர் சங்கக் கிளர்ச்சி உலகில் எல்லாத் தேசங்களிலும் ஒருவாறு செல்வாக்கு பெற்று விளங்குகிறது.

ஆனுலும் இப்பொழுது நிலைமையில் இதுவரையிலில்லாத நெருக்கடி யுண்டாயிருக்கிறது. சமூகம் யுத்தத்தினுலும், புரட்சியாலும், பொருளாதாரப் பண நிர்வாகத்திறமை யின்மையாலும் தாக்கப்பட்டு நிலைகுலைந்திருக்கிறது. இச்சமூகத்தை உறுதியான அடிப்படை மேல் திரும்ப அமைப்பதற்கு முதலாளித்துவம் சக்தியற்றதாயிருக்கிறது. யுத்தம் முடிந்தபின் கடந்த பல வருஷங்களாக நேர்ந்த அநுபவம் இவ்விஷயத்தை நமக்குத் தெளிவுபடுத்தியது.

### கோமையான நிலை

இன்றையநிலையில் உலகம் எல்லையற்ற குழப்பத்தில்ஆழ்ந்திருக்கிறது ;கோடூரமான முரண்பாடுகள் மனிதனைச் சூழ்ந்திருக்கின்றன ; இயந்திர சாதனங்களின் உதவியால் ஏராளமான பொருள்கள் உற்பத்தியாவதொரு பக்கம், பசிப்பிணியும் ஒழுக்கமற்ற குணங்களும் பிசாசுகள் போல் பயங்கரமாக நடமாடுவது மற்றொருபக்கம் ஆகிய இரண்டையும் சேர்த்துக் காண்கிறோம். இரண்டு கோடியே அறுபதுலட்சம் மக்கள் வேலைக்கு அலைகிறார்கள் ; ஒன்பது கோடி ஜனங்கள் அடுத்த வேளைக்கு உணவு எங்குக் கிடைக்குமோ என்று ஏங்குகிறார்கள்.

பொருளாதாரப் பிரச்னையை விட அதிக மோசமாக அரசியல் துறையிலும் முதலாளி தத்துவ ஆட்சியினர் சமாளிப்புத் திறமை யற்றவராகிறார். ஆதலால் அரசியல் விஷயங்களையும் நம்புதற்கில்லை.

### பாஸிஸ்ட் கட்சியின் அடக்குமுறை

பாஸிஸ்டு அடக்கு முறைக்குள் அடிமையாகும்படி மயங்கியோ பயந்தோ நின்ற ஜனங்கள் விழித்துக் கொண்டார்கள். இந்த முதலாளித்துவ ஆட்சியினர் தம் ஆதிக்கத்தை நிலை நாட்டக் கடைசி முறையாகவே இப்போது முயல்கிறு ரென்பதையும் அதன் கருத்தையும் ஜனசமூகம் அறிந்து கொண்டது. பொருள் நிலைச் சிக்கலுக்குப் பரிகாரமும் சமூக சமத்துவமும் கொண்டு வருவதாக அழகாகப் பேசிய போதிலும், வாக்குறுதிகள் செய்த போதிலும், மனித சமூகத்தைப் பயத்தாலும் மிருக பலத்தாலும் அடிமைப் படுத்துவதே அவர்கள் இலட்சியம்.

பாஸிஸ்டு சக்தி உலகக் குழப்பத்திற்கு வேண்டிய சாதனங்களை அதிகப் படுத்தியிருக்கிறது. 1914-ம் வருஷம் இருந்ததை விட இப்போது உலக அமைதி பலமாக வேரூன்றிநிற்பதாக எவரும் சொல்லத் துணியார். இப்பொழுது உலகில் ஏற்பட்டிருக்கும் பொருளாதார - அரசியல் - நெருக்கடியை நீக்க முயற்சி எடுத்துக் கொள்ளாவிட்டால் சீர்திருத்த முடியாத விபத்து மனிதவர்க்கத்தினிடையே ஏற்பட்டுவிடும். உலகில் சமாதானப் பேச்சும், ஆயுதப் பரிகரணப் பேச்சும் நடைபெறுகின்றன. அதே சமயத்தில் பொக்கிஷம், பணமாற்றுவிகிதம், பொதுவாகவே பொருளாதார விஷயம் இவற்றில் ஒழுங்குமுறைகள் ஏற்படுத்தத் தக்க உபாயங்களும் கையாளப் படுகின்றன.

### ஒற்றுமை தேவை

தொழிலாளர்கள் சம்மதிக்கக் கூடிய பரிகாரங்களை ஆட்சி செலுத்தும் பொறுப்புள்ளவர்கள் செய்வதற்கு ஏற்ற அறிவும் உறுதியும் அவர்களிடம் விளங்குமா? இது சந்தேகமே ஆயினும் ஜனங்கள் உறுதியாகவும் ஒற்றுமையுடனு மிருந்தால் அத்தகைய பரிகாரங்களைச் செய்யக்கூடிய அவசியத்தை அரசாங்கத்தவரிடம் உண்டாக்கலாம்.

தங்கள் குறைகளையறிந்த தொழிலாளர்கள் கட்டுப்பாட்டுடன் தேவைகளைப் பெறும் முயற்சியில் இறங்கி உறுதியுடன் உழைத்து, ஜனங்களை நடத்திச் சென்று வெற்றியடைய வேண்டும்.

அரசாங்கத்தவரும், அவர்களது நிபுணர்களும், சர்வதேசத் தொழிலாளர் கிளர்ச்சித்தலைவரும் ஆராய்ச்சிசெய்து ஒத்துப் பார்த்தபின் பரிகாரங்களையும், திட்டங்களையும் வகுத்திருக்கின்றனர். அவற்றில் பத்திலொரு பாகமாவது கையாளப்படுமானுல்தொழிலாளர் நிலை உடனே சீர்திருந்தும். மேற்பட்டபடிப்பும் ஆராய்ச்சியும் தேவை இல்லை ; காரியங்களைச் செய்யவேண்டும். தொழிலாளர் தேவைகள் பூர்த்தியாகுமாறு அதிகாரிகள் செய்யவேண்டும்; அதிகாரிகளைத் தூண்டுவது எப்படி? லண்டனில் ஜுலை மாதம் கூடப்போகும் காங்கிரஸ் இதையும் யோசிக்கும்.

## தொழிலாளர் பகுதி

## பணம் சேர்க்கும் ஸ்தாபனங்கள்

### தலைமயிர் கத்தரித்தல்

சென்ற வெள்ளிக்கிழமை சென்னைப் பெரம்பூரில் எம். எஸ். எம். ரயில்வே தொழிலாளர் மகாநாடு நடைபெற்றது. ஸ்ரீ எம். சிவசுப்பிரமணியம் தலைமை வகித்தார். பம்பாய் மேயர் ஸ்ரீ ஜம்னுதாஸ் மேத்தா மகாநாட்டைத் திறந்து வைக்கக் கூறியதன் சாரமாவது :—

உங்கள் சங்கத்தில் சேர்ந்து வேலை செய்ததற்காக ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி யென்பவரை இராஜிநாமா செய்யும்படி ரயில்வே அதிகாரிகள் கட்டாயப் படுத்தினர்கள் ; தொழிலாளர் சங்கத்துக்கு ஊழியஞ் செய்ததைத் தவிர மற்றொன்றும் அறியாத பலரை வேலையினின்றும் தள்ளிவிடுகிறார்கள். இராணுவங்களை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குக் கொண்டு போதல், ரயில்வே பாண்டுகள் வைத்திருப்பவர்களின் நன்மையைப் பாதுகாத்தல் வியாபாரிகளின் சாமான்களை ரயில்வேக்களில் உபயோகித்து அவர்களுக்கு இலாபம் சம்பாதித்துக் கொடுத்தல், ஆகிய இம்மூன்று காரியங்களைச் செய்வதே அதிகாரிகளின் முக்கியக் கருத்தாகும். போக்கு வரவுக்குச் சாதகமாக வேலைசெய்வது,தொழிலாளர் நலத்துக்காகப் பாடுபடுவது என்று சொல்வதெல்லாம் வெறும் பேச்சுக்கள். பிற்காலத்தில் சுயேச்சை கொண்ட ஸ்தாபனங்கள் தங்களிடம் அணுகாதிருக்க வேண்டுமென்றே புதியரயில்வே போர்டை சட்டப்படி அமைக்க அதிகாரிகள் எண்ணி யிருக்கிறார்கள். உங்களுடைய குறைகள் கவனிக்கப்பட மாட்டா. பிற்கால அரசியலில் உங்களுக்கு அதிகாரிகள் இழைக்கக்கூடிய தீங்குகளைப்பற்றி யாராவது பேச முன்வந்தால் சட்டசபையில் அத்தகைய விஷயங்கள் அனுமதிக்கப்பட மாட்டாவாம். ஆகவே இந்தப் புதிய ரயில்வே போர்டு கோட்டைக்குள் கோட்டை போன்றதாகும்.

இந்தியாவிலுள்ள இந்த ரயில்வேக்கள் குவியல் குவியலாகப் பணம் சேர்க்கும் ஸ்தாபனங்கள். இந்திய ரயில்வேக்கள் இப்பொழுதிருக்கும் நிலையில் உங்களுக்கு அதிக சம்பளம் கொடுக்க முடியும் ; உங்கள் குழந்தைகளுக்கு இலவசக் கல்வியளிக்க முடியும்.

ரயில்வே அதிகாரிகளின் படாடோபமான பிரயாணங்களால் ஏற்படும் செலவைப் பற்றி உங்களுக்கு நான் கூற வேண்டிய அவசியமில்லை. பம்பாய்க்கு வந்து தலைமயிரைக் கத்தரித்துக் கொள்வதற்காக ரயில்வே அதிகாரியின் மனைவியார் உங்கள் செலவிலும் என் செலவிலும் 200 மைல் பிரயாணம் செய்கிறார்.

## மறந்து விடுங்கள்

### மகாத்மாவின் கடிதம்

சர்வதேச ஹிந்து மகாசபைக் காரியதரிசி, ஹரிலால் காந்தி முஸ்லிமானது பற்றி மகாத்மா காந்திக்குப் பின்வரும் செய்தியை அனுப்பினர்:—

"ஹரிலால் காந்தியின் மதமாற்றம் ஹிந்துக்களைத் திடுக்கிடச் செய்திருக்கிறது. தவமுன வழியில் சென்ற சகோதரரை எப்படிமீட்கலா மென்பதற்கு அன்புகூர்ந்து வழிகாட்டுங்கள்."

மகாத்மாகாந்தியின் பதில்வருமாறு:-

"ஹிந்து மதத்திலுள்ள அசுத்தங்களை நீக்க மாத்திரம் இக்குறைகளை ஞாபகம்வைத்துக் கொள்ளுங்கள். மற்றப்படி இவற்றை அலட்சியம் செய்து ஒதுக்கிவிடுங்கள்."





## மணித்திரள்

மாம்பழம் தின்றபின் ஒரு கிண்ணம் பால்சாப்பிட்டால் மலச்சிக்கல் நீங்கும்.

* * *

ஜர்மனியில் எலிகளைக் கொல்லுவதற்காக எலி வளைகளில் 'ஐஸ்' கட்டிகள் போடப்படுகின்றனவாம்.

* * *

மின்சாரவிசிறிகளால் அபாயம் ஏற்படாதிருக்க அறிஞர்கள் அவ்விசிறிகளிலுள்ள இலைகளை ரப்பரால் அமைக்கிறார்கள்.

* * *

பிளாரிடா நாட்டில் அன்னத்தைப் போன்றதோர் பூவிருக்கிறதாம். சிறு பூச்சிகளைத்தின்றே இப்பூச் செடி வளர்கிறதாம்.

* * *

பிரிட்டிஷ் விஞ்ஞானிகள் குடைப் பிடியிலேயே தூரதிருஷ்டிக் கண்ணுடிகளையும், போட்டோ காமராக்களையும் அமைத்திருக்கிறார்கள்.

* * *

தாவர சாஸ்திரம்படித்த மில்பர்ன் நகரப் பெண்மணி ஒருவர் பாட்டில்களுக்குள் செடிகளை வளர்க்கும் விதத்தைக் கண்டு பிடித்திருக்கிறார்.

* * *

நியூயார்க் நகரிலுள்ள ரேடியோ இஞ்சினியர்கள் தங்கள் 'தொப்பி'களிலேயே ஒலிபரப்புங் கருவிகளை அமைத்திருக்கிறார்கள். இது ஒரு சிறந்த சாதனம்.

* * *

பரில்லியைச் சேர்ந்த ரசிம் நாராயண முன்ஷியின் மனைவியார் ஒரு பிள்ளையைப் பெற்றிருக்கிறார். அப்பையன் பிறக்கும்போதே 32 பற்களுடனிருந்தானும்.

* * *

அமெரிக்காவுக்குக் குபேரநாடென்று பெயர். ஆனுல் அங்கே ஐயோவா என்ற பிரதேசத்தில் உள்ளபஞ்சம் கொஞ்சமல்ல; நாய்களுக்காகத் தயாரிக்கப்பட்ட உணவை மக்கள் உட்கொள்கிறார்கள்.

* * *

மேற்கு நாட்டவர் இப்பொழுது புதிய மாதிரியில் மோட்டார்களைப் அமைக்கிறார்கள். இம் மோட்டார்களிலுள்ள பின்பக்கத்து 'ஸீட்' களைப் படுப்பதற்கு வசதியாகவும் மாற்றிக் கொள்ளலாம்.

* * *

பிலிப்லூயிஸ் என்பவர் 37 வருஷங்களில் 276,000மைல் யாத்திரை செய்திருக்கிறார்; 75,000 மைல் நடந்திருக்கிறார்; 200 ஜதை பாதரட்சைகள் வாங்கியிருக்கிறார்; 51 முறை விவிலிய நூலைப் படித்திருக்கிறார்.

* * *

1934-ம் வருஷம் ஜர்மனியில் மோட்டார் விபத்தால் இறந்தவர்களின் தொகையைவிட வீடுகளில் இறந்தவர்களின் தொகை ஐந்து பங்கு அதிகமாம். இவர்களில் படுக்கையறையில் மாண்டவர்களின் தொகையே அதிகம்

* * *

ஜர்மனியில் பத்திரிகா நிருபர் ஒருவர் தமது மழைக் கோட்டில் ஒரு ஜன்னலை அமைத்திருக்கிறார். தமது மடியில் காகிதத்தை வைத்துக்கொண்டு எழுதுவதை இந்த ஜன்னல் வழியாகப் பார்க்க அவரால் முடியுமாம்.

* * *

ஏராளமாக முட்டை தின்பதில் உலகிலேயே முதன்மையானவர் கானடா நாட்டினராம். ஒருகானடியன் வருஷம் ஒன்றுக்கு 400 முட்டைகள் சாப்பிடுகின்றானும். அதாவது ஒருநாளைக்கு ஒருமுட்டைக்கு அதிகமாகவே சாப்பிடுகின்றான்.

* * *

பழைய மாதிரியான மூக்குக்கண்ணுடிகள் அணிந்து கொள்வதனுல் இங்கிலாந்துப் பெண்கள் வெறுப்புற்றிருக்கிறார்கள். ஆகவே கண்ணுடித் தொழிலாளர் இதய வடிவத்தில் மூக்குக் கண்ணுடி 'பிரேம்' களை அமைத்திருக்கின்றனர். இதனுல் பெண்கள் அழகு மிகுந்து காணப்படுகிறார்களாம்.

## சிறந்த தேசத்தொண்டு வேறுண்டோ?

### ஸ்ரீ. சர்தார் படேல் பேச்சு

சென்ற ஞாயிற்றுக்கிழமை மாலை பங்களூரில் பெண்கள் கூட்டத்திடையே சர்தார் வல்லபாய் படேல் ஹிந்தியில் ஒரு பிரசங்கம்செய்தார். ஸ்ரீசித்தாநாத்பந்த் அதைக் கன்னடத்தில் மொழி பெயர்த்தார். அதுவருமாறு:—

"கிராமங்களில் நிலவி வரும் திருப்தியும், அமைதியும் குடி கொண்ட வாழ்க்கையை, நகரத்திலிருந்து கிராமங்களைப் பார்வையிடும் பெண்மணிகள் கெடுத்து இச்சையைத் தேடும் வாழ்க்கையாக மாற்றி விடக் கூடாது. ஆண்களைவிடப் பெண்களே கிராமப் புனருத்தாரண வேலையில் சிரத்தையுடன் உழைக்கக் கூடுமென நான் அபிப்பிராயப் படுகிறேன். நகரிலுள்ள பெண்கள் அடிக்கடி கிராமங்களுக்குச் சென்று குடிசைத் தொழில்களுக்கு ஆதரவளித்துக் கிராமச் சகோதரிகளுக்குக் கல்வி கற்பிப்பார்களானுல் அதைவிடச் சிறந்த தேசத் தொண்டு வேறுண்டோ? இந்தியநாட்டின் இதயஸ்தானம் கிராமங்களேயாகும். வாழ்க்கைஅபிவிருத்தி யடைந்தா லொழிய பொருளாதார அரசியல் விஷயங்களுக்குப்பரிகாரம்ஏற்படாது. பெண்கள் ஆண்களுடன் சேர்ந்து கிராமத்தொண்டில் ஈடுபட்டால்தான் கிராமத்தவரின் வாழ்க்கை சீர்திருந்தும். கிராமங்களிலிருந்தே பொருள் கிடைக்கின்றதென்பதை நகரமக்கள் உணர வேண்டும் ; இதையுணர்ந்தால் கிராமங்களைச் செழிக்கச் செய்வது தங்கள் கடமையென அறிவார்கள்.

பெண்களிடம் சக்தியிருக்கிறது. நம் நாட்டுக் குடிசைப் பொருள்களையே வாங்குமாறு போதிக்க வேண்டியது அவர்கள் பொறுப்பு.

மைசூர் அரசாங்கத்தார் அநேக கதர்ச் சாலைகளை வைத்திருக்கிறார். நீங்கள் கதரை மனப்பூர்வமாக ஆதரிக்க வேண்டும்.

பெண்கள் ஹிந்தி கற்க வேண்டும். நம் நாட்டிற்கு ஒரு பொதுபாஷையிருக்க வேண்டும். தேசத் தொண்டு செய்ய விருப்புவோர் ஹிந்தி கற்க வேண்டுவது அவசியம்.

ஹரிஜனங்களின் உரிமைகள் சாஸ்திரம் என்ற போர்வையால் மூடப்பட்டிருக்கின்றன. அவர்களது உரிமைகளை மறுப்பது குற்றமல்லவா? ஹரிஜனங்களை வேறாக நடத்தும் வரை ஹிந்து மதத்திற்கு அபாயமே.

ஹரிஜனங்களுக்கு-நாம்ஒதுக்கிவைத்திருக்கும் சகோதரர்களுக்கு-சிக்பல்லாபூரில் பாதிரிகள் ஐந்துலட்சம் ரூபாய் செலவு செய்து வைத்தியசாலைகள் கட்டியிருக்கிறார்கள். இதுநமக்கு வெட்கமில்லையா? நமது நாட்டுச் சகோதரர்களுக்கு அந்நியர் உதவி செய்யும் வரை நாம் இடம் கொடுப்பதா? இதுஹிந்து மதத்திற்கே பெருத்தஅவகேடாகும்."

## சுண்டெலிகள் மீதுவழக்கு

பாரிஸிலுள்ள ஒருபெண் தமது ஆபரேஷனுக்கு ஐந்து சுண்டெலிகளே காரணமென்றும், அதற்கு நஷ்டஈடாக 1500 பவுன் கிடைக்க வேண்டுமென்றும் வழக்குத் தொடர்ந்திருக்கிறார். இந்தச்சுண்டெலிகள் ஒரு ரசாயனசாலையில் வியாதி பரிசோதனைக்காக வளர்க்கப்பட்டு வந்தன. வைத்தியர்கள் இந்த சுண்டெலிகளுக்கு 'இஞ்செக்ஷன்' செய்து பரிட்சை பார்த்ததன் பயனுக அப்பெண்ணுக்குஆபரேஷன் செய்தால் நலமென்று அபிப்பிராயப் பட்டார்கள். ஆபரேஷன் நடந்தபின் வைத்தியர்தாம் எண்ணிய வியாதிக்கு அறிகுறியில்லாததுகண்டு ஆபரேஷன் செய்தது வீண் என்று கூறினர். இதையே ஆதாரமாகக்கொண்டு, அப்பெண் வழக்குத் தொடர்ந்திருக்கிறார்.

## ஜவஹருக்கு ஆதரவு

### மேற்கிலிருந்து புகழ்மாலைகள்

பண்டித ஜவஹர்லால் நேருவின் பிரஜா உரிமைச் சங்கத்திற்கு மேற்கு நாடுகளிலுள்ள பலர் ஆதரவளிக்கின்றனர். எச். ஜி. வெல்ஸ் முதலியோர் இத்திட்டத்தை வரவேற்கின்றனர்.

பலவித பிரிட்டிஷ் அரசியல் கட்சியினரும் அடங்கிய ஒரு சபையின் பிரபல அங்கத்தினர் ஒருவர் ஸர் தேஜ் பகதூர் சாப்ரூவின் எதிர்ப்பு விஷயமாகப் பின் வருமாறு கூறுகிறார் :—

"லிபரல்கட்சியில் உறுதியான பற்றுள்ள எவரும் ஸர் தேஜ்பகதூர்சாப்ரூ,ஜவஹரின் திட்டத்திற்கு எதிராக இருப்பதை ஆட்சேபிப்பர். ஏனெனில் உண்மையான லிபரல் கட்சியின் கொள்கையென்ன வென்றால், ஒருவர் எவ்வளவு பெரிய அரசியல் எதிரியாகவிருந்த போதிலும் அவருடைய உரிமையின் சுதந்திரத்திற்காகவும் போராட வேண்டுமென்பதே"

புரொபஸர் லஸ்கி,ஸர் ஸ்டாப்போர்டு கிரிப்ஸ் முதலிய பலர் தாம் மனப்பூர்வமாக ஒத்துழைப்பதாக வாக்களித்திருக்கின்றனர்.

இந்தியா லீக்கின் காரியதரிசியான ஸ்ரீகிருஷ்ணமேனன் குறிப்பிடுகிறார்:—

"இந்திய தேசீயக் காங்கிரஸின் தற்காலத் தலைவர் காரியவாதி யென்பதை இது காண்பிக்கின்றது."

"இதனுல் இந்தியாவின் சுதந்திரப் போராட்டம் வலுப்படுத்தப் படுகிறது."

என்று ஏகாதிபத்திய எதிர்ப்புச் சங்கக் காரியதரிசி ரெஜினல்டு பிரிட்ஜ்மன் கூறுகிறார்.

டேவிட் கிரென்பெல் முதலியவர்கள் இந்தியாவின் பிரஜா உரிமை விஷயமாக இங்கிலாந்தில் வேலைசெய்ய ஒருகமிட்டி நியமிக்க உத்தேசித் திருக்கிறார்கள். இந்திய சங்கங்களின் மூலமாக இந்தியாவைப் பற்றிய உண்மையான விஷயங்களை அறிய அவர்கள் ஆவல்கொண்டுள்ளார்கள்.

## ஹிந்து முஸ்லிம் ஒற்றுமை

### 'தர்மமே ஆட்சி செய்தது'

சென்றவாரம் மசூலிப்பட்டணத்தில் ஸ்ரீ பட்டாபி சீதாராமய்யா தலைமையில் நடந்த பொதுக் கூட்டம் ஒன்றில் ஸ்ரீ உமராலிஷா, இந்தியா சட்டசபை அங்கத்தினர் செய்த பிரசங்கத்தின் சாரம் வருமாறு :—

"இந்தியாவின் பெருமைக்கு ஹிந்து முஸ்லிம் பயிற்சிகளிரண்டும் காரணங்களாயின. இந்தியாவில் வீரர்களுக்கும் உத்தமப்பெண்களுக்கும், ராஜ்ய ஸ்தாபனம் செய்தவர்களுக்கும் குறைவில்லை. இவர்களெல்லோரும் தம்சக்திகளால் குற்றமற்ற ஜனங்களை மிதிக்க விரும்பாமல் தர்மத்தைக் காப்பதில் தங்கருத்தைச் செலுத்தி வந்தார்கள். தியாகிகளும் முனிவர்களும் தர்மங்காத்த மன்னர்களும் மனிதசமூகத்தை அழிக்கும் சிந்தனையின்றி இரட்சிக்க வேண்டிய காரியங்களையே கடமையாகக் கொண்டார்கள். உலக நாகரிகமே இந்தியாவில் ஆரம்பமாயிற்று. ஐரோப்பிய நாகரிகத்தைப் பாருங்கள். சர்வதேச சங்கம் உயிருடனிருக்கிறதா? விஷப்புகையும் இதர ஜனசமூகங்களை அழிப்பதுமே நாகரிகமானுல் அது இந்தியாவுக்கு வேண்டாம். ஹிந்து முஸ்லிம்கள் வெவ்வேறு சமூகத்தவரல்லர் ; ஒரே ஜாதியிலிருந்து வந்தவர்களே. உலக விஷயங்களில் இருவருக்கும் மனப்பான்மை வேறுயிருக்கலாம். கோயிலுக்குள் ஹிந்துவாகவும் மசூதிகளில் முஸ்லிமாகவும் இருந்த பிறகு வெளியில் இருவரும் ஒரே சமூகமாக நிற்பார்களாக."

## உலகக் காட்சி

### ரசீது கொடுக்கும் இயந்திரம்

பிரிட்டிஷ் பாங்குகளில் பணம் கொடுத்து வைப்போரின் சௌகரியத்திற்காக பாங்கு அதிகாரிகள் ஒரு புது இயந்திரத்தை யேற்படுத்தி யிருக்கிறார்கள். அந்த இயந்திரத்தின்வாயில் பணம் செலுத்துவோர் தாம் கொண்டுவந்த சாமானைப்போட வேண்டும். உடனே 'கிளிக்' என்ற சப்தம் கேட்கும். சற்று நேரத்தில் அந்தச் சாமானின் போட்டோவும் ரசீதும் வெளியே வந்து விழும். இதேசமயத்தில் கணக்குப் புத்தகத்தில் நேரமுட்படப் பதியப்படுகிறது.

* * *

### மரத்தில் மறைந்த மனிதன்

மேற்கு நாட்டில் மரத்தில் மறைந்த ஒரு மனிதனின் எலும்புக் கூடு சமீபத்தில் கண்டு பிடிக்கப்பட்டது. இம்மனிதன் 'ஓக்' மரத்தின் பிளந்த பாகம் ஒன்றில் முழங்கால் மண்டியிட்டபடி யிருக்கிறான். அவன் யுத்தகவசம் பூண்டிருக்கிறான். அவனருகில் துருப் பிடித்த வாளாயுதம் ஒன்றிருக்கிறது. இம்மனிதன் எதிரிகளுக்குப் பயந்து இந்த மரத்தின் பிளவுக்குள் ஒளிந்திருக்கவேண்டு மென்றும், பிறகு இவன் வெளிவர முடியாமல் தவித்து மாண்டிருக்க வேண்டுமென்றும் ஆராய்ச்சியாளர்கள் கருதுகிறார்கள்.

* * *

### நடந்து கொள்ளும் விதம்

ஜப்பான், 'யாத்திரிக போர்டார்' ஹோட்டல்களிலும், சிற்றுண்டிச் சாலைகளிலும், நாடகக்காட்சிச் சாலைகளிலும் வேலைபார்க்கும் பெண்களுக்காக 'அந்நியரிடம் பழகும் முறை' என்று தலைப்பிட்டுக் கீழ்க்கண்ட நீதி மொழிகளைப் பொறித்து விளக்குகளால் அவற்றை அலங்கரித் திருக்கின்றனர். அவைவருமாறு:—.

அந்நியர்எதிரில் இரகசியமாகப்பேசாதே. பழங்களைத்துண்டம் செய்யாமல் அந்நியர் எதிரில் விழுங்காதே. சினிமாவில் பார்த்துக் கற்றுக்கொள்ளும் 'நாஸுக்'குகளை அந்நியர் எதிரில் நடியாதே. அந்நியர் குளிக்கும் பொழுது ஸ்நான அறைக்குள்சென்று உதவி புரியாதே; 'வெந்நீரின் சூடு போதுமா' என்று கேளாதே. வெளிநாட்டுப் பெண்கள் வந்தால் உடனே அவர்களுக்குச் சிறு துண்டுகளைக் கொடுத்து முழங்காலை மூடி உட்காரச்சொல்.

* * *

### அமெரிக்கரின் விசனம்

உலகத்திலுள்ள பல பொருள்களும் அவை கண்டு பிடிக்கப்பட்ட நாள் முதல் கொஞ்சம் கொஞ்சமாக அபிவிருத்தி யடைந்து வருகின்றன. ஆனுல் குடைகள் மாத்திரம் முன்மாதிரியிலிருந்துஅபிவிருத்தியடையவில்லை. இதனுல் விசனமுற்ற அமெரிக்க நிபுணர் ஒருவர் குடையின் முன்புறத்தில் நீண்ட சதுர வடிவமுள்ளதொரு ஜன்னலைப் பொருத்தி யிருக்கிறார். மழைபெய்யும் பொழுது தங்கள் தலையைச் சாய்த்துக் குடையால்வழியைமறித்துப்போவோர் வருவோரைக் குடையால் இடிக்கும் சிரமத்தைமக்கள் அடையாமலிருக்க இவர் விரும்புகிறார். இந்த ஜன்னல் மெல்லிய கண்ணுடியால் செய்யப் பட்டது; மழையில் நனையாதது ; உள்ளிருந்து வெளியேபார்க்கக் கூடியது; எவ்வளவு பெரிய மழையிலும் கண்ணுடிகளில் தூசி படியாதது. அந்தக்குடைக்குள்ளேயே ஒரு பையுண்டு. வேண்டாத பொழுது முன் சொன்ன கண்ணுடி ஜன்னலை அந்தப் பைக்குள் வைக்கலாம். உடைந்து போனுல் சொற்பத் தொகையில் மற்றொன்றும் வாங்கிக் கொள்ளலாம்.

எங்கடன் பணிசெய்து கிடப்பதே
எவ்வுயிர்க்கும் அன்பாயிரு
நவசக்தி

நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம் நரகத்தி லிடர்ப்படோம் நடலை யில்லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்ப மில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற், கோமாற்கே நாமென்றும் மீளா வாளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே.—(அப்பர்.)

சென்னை 1936௵ ஜூன்மீ 12உ

## சமதர்மமும் கடவுளும்

இந்நாளில் சமதர்மப் பிரசாரம் உலக முழுவதும் நடைபெற்று வருகிறது. சமதர்ம வாடைவீசாத இடமே இல்லை. அவ்வாடை நமது நாட்டிலும் வீசத் தொடங்கியிருக்கிறது. வாடை சிலருக்குப் பிடிப்பதில்லை. வாடையால் சிலருக்குச் சுரங்காண்பதுமுண்டு. நமது நாட்டில் சிற்சில இடங்களில் இப்பொழுது சுரங்கண்டே யிருக்கிறது.

நமது நாட்டில் சமதர்மப் பிரசாரம் பொதுமுறையில் செய்யப்பட்டுவந்தது. இப்பொழுது-இலட்சுமணபுரிக் காங்கரஸுக்குப் பின்னர்-அப்பிரசாரம் சிறப்பு முறையில் செய்யப்பட்டு வருகிறது. பண்டித ஜவஹர்லால் நேரு சமதர்ம இயக்கத் தலைவராயிருந்து, அத்தர்மத்தை மக்களிடைப் பரப்ப முனைந்து நிற்கிறார். அவர் தம் தலைமையும் முனைவும் நாட்டை விழிக்கச் செய்கின்றன. ஜவஹர்லால் சமதர்மப் பிரசாரத்தை நாட்டுக்கு ஏற்றமுறையிலேயே செய்து வருகிறார். 'எல்லாவற்றிற்கும் ருஷியாவின் அடிச்சுவட்டைப் பற்றுதல் கூடாது' என்று அடிக்கடி ஜவஹர்லால் எச்சரிக்கைசெய்வதுகவனிக்கத்தக்கது.

'சமதர்ம இயக்கமே கூடாது' என்னுங் கொள்கையுடைய கூட்டம், சமதர்மப் பிரசாரத்தைத் தகைய விறிட்டு நிற்கிறது. இக்கூட்டம் நேரிய முறையில் பிரசாரஞ் செய்யலாம். பிரசார உரிமைக்கு இடமுண்டு. அவ்வுரிமை பறிமுதலாகாது. பிரசாரத்தின்கட் பொய் மூட்டைகளைக் கட்டி விடுதல் பெருந்தகைமையாகாது.

சம தர்மத்தின்மீது பலவிதப் பழிகள் சுமத்தப்படுகின்றன. அவைகளுள் ஒன்று கடவுளைப்பற்றியது. நமது நாட்டில் கடவுள் பற்று அதிகம் என்பது உலகறிந்தவொன்று. அத்தகைய நாட்டில் 'சமதர்மம் கடவுளுண்மையை மறுப்பது' என்றுபிரசாரஞ் செய்தால், அத்தர்ம இயக்கத்தின்நிலை என்னகும்?

சமதர்மத்தை ஒடுக்க அதன் பகைவர் என்ன சூழ்ச்சி செய்யினுஞ்செய்க. அத்தர்ம இயக்கம் சாதல் அரிது. அது மக்களிடை ஊடுருவி நிற்கிறது. அதற்குஆதரவு உலகமுழுவதுமிருக்கிறது. அதை இன்றைக்கு வேண்டுமானல் சிலர் அசைத்தலாகும். அதை என்றைக்கும் அசைத்துக் கொண்டிருத்தல் எவராலும் இயலாது.

கடவுள் என்பது எது? கடவுள் என்பது எங்கும் நீக்கமற நிறைந்து எல்லாவற்றையும் இயக்கும் ஒரு சித்சக்தி. அச்சக்தியால் இயக்கப்பெறாத தொன்றில்லை. அதனல் சராசரமெல்லாம் இயங்குகின்றன. இதை மறுக்கும் அறிஞரிரார். எங்குமுள்ள சித்சக்தி



யின் இயல்பை உணரமுயல்வோரைக் கட்டுப்படுத்த எச்சமதர்மியும் நினையான். அவ்வாறு நினைப்பது சமதர்மம் ஆகாது.

உலகில் தோன்றிய சமயாசாரியரெல்லாரும் சம தருமத்தையே அறிவுறுத்திச் சென்றனர். 'எவ்வுயிர்க்குஞ் செந்தண்மை பூண்டொழுகல்' என்னும் பேரறமே சமயாசாரியர்களால் போதிக்கப் பெற்றது. 'எல்லா உயிரினும் ஈசன் இருக்கிறான்' என்னும் போதனையின் உள்ளக்கிடக்கை என்னை? எல்லாரும் சகோதரர் என்பதன்றோ அதன் உள்ளக் கிடக்கை? சகோதர நேயம் என்பது எது? ஏழைகளின் இரத்தத்தை உறிஞ்சு கோடிக் கணக்கான பொருள் சேர்த்து வரம்பு மீறிய களியாடல்களில் வீழ்ந்து நெளிவதா சகோதர நேயம்? எல்லா உயிரையும் சமமாக நேசிப்பதன்றோ சகோதர நேயம்? அண்டை வீட்டு ஏழை பட்டினி கிடக்க அநியாயமாக ஈட்டிய பொருளால் கோயில் கட்டுவதும் திருவிழாச் செய்வதும் எங்ஙனங் கடவுளுக்குரிய செயல்களாகும்?

கடவுள் என்பது பணக்காரர் உடைமையன்று. அஃது எல்லாரிடத்திலும் சமதர்மமாக நிற்பது. அது பணக்காரரிடத்தில் அதிகமாகவும், ஏழைகளிடத்தில் குறைவாகவும் நிற்பதன்று. 'உரைசேரும் எண்பத்து நான்குநூ றுயிரமாம் யோனிபேதம், நிரைசேரப் படைத்தவற்றின் உயிர்க்குயிராய் அங்கங்கே நின்றான் கோயில்' என்று பெரியோர் அருளியதை ஓர்க. ஆகவே உண்மைக் கடவுளை உணர்த்தவல்லது சமதர்மமே யாகும்.

பண்டை நாளில் உலகம் சமதர்மக் கடவுளையே போற்றி வந்தது. நாளடைவில் செல்வம் ஒரு பக்கம் பெருகப் பெருகச் சமதர்மக் கடவுள் வழிபாடு அருகி விட்டது. பொய்க் கடவுள் வழிபாடுஎங்கணும்பெருகிவிட்டது. தற்போதுள்ள கோயில்கள் பலவும், மடங்கள் பலவும், பிறவும் உண்மைக் கடவுளை உணர்த்துவனவா என்று கேட்கிறோம். கடவுளுக்குப்பொன்னணியும்வெள்ளித் தேரும் என்று வந்தனவோ அன்றே சமதர்மக்கடவுளின் வழிபாடும்தொலையலாயிற்று. சாதிக் கடவுள் - மதக் கடவுள் - நிறக்கடவுள் - தேசக் கடவுள் - பணக் கடவுள் - ஏழைக் கடவுள்-முதலிய கட்டுப்பட்ட கடவுளர் போற்றப்படலாயினர். ஆன்றோர் 'அன்பே அன்பே' என்று போற்றிய அன்புக் கடவுளே உண்மைக் கடவுளாகும். அக்கடவுளுக்கு எப்பொழுதும் அழிவு நேராது. 'சமதர்மப் பிரசாரத்தால் கடவுள் அழிவார்' என்று சொல்வது அறியாமை.

சமதர்மிகள்மீது வீண் பழியே சுமத்தப்படுகிறது. அன்புக் கடவுளுக்கு எப்பொழுதும் ஆபத்துநேராது. சமய நேயர் அஞ்ச வேண்டுவதில்லை. நமது நாட்டுக்குரிய முறையில் சமதர்மம் நிலைக்கும். நாட்டுக்கு மாறுபட்ட ஒன்று நிலை பெறாது. இயற்கை அன்னை இடத்துக்கேற்ற முறையில் எதையும் ஒழுங்குபடுத்துவாள்.

## ஸ்தல ஸ்தாபனங்கள்

ஸ்தல ஸ்தாபனங்களைக் காங்கரஸ் பற்றல்வேண்டுமென்று பெருங்கிளர்ச்சி செய்யப்பட்டது. அக்கிளர்ச்சியின் பயனாக ஆங்காங்குள்ள ஸ்தாபனங்கள் படிப்படியாகக் காங்கரஸ் வயப்பட்டே வருகின்றன. இச்சமயத்தில் காங்கரஸ் நிர்வாகிகளிடத்திலும், ஸ்தல ஸ்தாபன நிர்வாகிகளிடத்திலும் நேர்மை யிருத்தல் வேண்டும் என்பதை வலியுறுத்துவது அநாவசியம். இரண்டு நிலையங்களின் நிர்வாகிகளும் நேர்மையாகநடந்து வந்தால், தேச மகா சபையாகிய காங்கரஸ் நாளுக்கு நாள் ஆக்கம் பெறுவதாகும்.

இப்பொழுது காங்கரஸ் செல்வாக்குப் பெற்ற அமைப்பா யிருக்கிறது. இச்செல்வாக்குக்குக் காரணம் பலதேச பக்தர் தியாகமே யாகும். தியாகத்தை அடிப்படையாகக் கொள்ளும் எதுவும் செல்வாக்குப் பெறுதல் இயல்பு. செல்வாக்கை நிலைபெறுகச் செய்ய முயலவேண்டுவது தேசபக்தர் கடமை.

நமது நாட்டில் பதவி வேட்டை அதிகம். அவ்வேட்டைக்காரருக்குக் கட்சிக் கட்டுப்பாடோ கொள்கையோ ஒன்றுமிராது. செல்வாக்குப் பெற்றுள்ள கட்சியில் சேர்ந்து வெற்றிபெற வேண்டுமென்பது அவர் தம் குறிக்கோள். இக்கூட்டத்தார் நாட்டில் - அதினும் தமிழ் நாட்டில்-பல்கியிருக்கிறார். இவர் தங் கட்சிக்குப் பெயர் என்னை? அதற்குச் சுயநலக்கட்சி என்னும் பெயர் சூட்டலாம்.

காங்கரஸ் ஒத்துழையாமையைக் கடைப்பிடித்து நின்ற போது, நமது தமிழ் நாட்டில், ஜஸ்டிஸ்கட்சி அரசாங்கத்துடன் ஒத்துழைப்பதில் தலைசிறந்து நின்றது. அப்பொழுது சுயநலக் கூட்டத்தாரெல்லாரும் ஜஸ்டிஸ் கட்சியில் சேர்ந்து ஸ்தலஸ்தாபனம் முதலிய அமைப்புகளைப் பற்றலாயினர். இப்பொழுது காங்கரஸ் ஒத்துழையாப் போரை நிறுத்தி ஸ்தல ஸ்தாபனம் முதலியவற்றைப் பற்ற முயன்று வருகிறது. இவ்வேளையில் சுயநலக் கூட்டம் காங்கரஸ் வேடம் பூண்டு நடிக்கத் தொடங்கி யிருக்கிறது.

காங்கரஸ் பொது உடைமை. அதில் எவரும் சேரலாம். காங்கரஸ் எவர்க்கும் உரியது. காங்கரஸில் சேர்வோர் எவராயினுமாக. அவர் காங்கரஸ் கொள்கையில் உறுதி யுடையவராயிருத்தல் வேண்டும். ஒரு கட்சியிலிருந்து மற்றொரு கட்சிக்குப் போகலாம். போகும்போது மனந்திரும்புதலும் உடன் நிகழ்தல் வேண்டும். மனந்திரும்பாது உடல் மட்டுந் திரும்புவது கரவின்பாற்படும். உள்ளும் புறமும் ஒத்த செயலே ஒருவரை உயர்த்தும்.

ஸ்தல ஸ்தாபனத் தேர்தல் காலங்களில் தேர்தலில் வெற்றி பெற வேண்டிப் பலர் தமது முன்னைய கட்சியை விடுத்துக் காங்கரஸில் சேர்கிறார்; சேர்ந்து தாம் குறிக்கொண்ட வெற்றியும் பெறுகிறார்; பெற்ற பின்னைக் காங்கரஸ் நினைவே அவருக்குத் தோன்றுவதில்லை. வெற்றிக்குமட்டும்சகோதரர்கள் காங்கரஸ் பெயரைப் பயன்படுத்திக் கொள்கிறார்கள்.

காங்கரஸ் அபேட்சகர் தேர்தலில் ஈடுபடுவதற்கு முன்னர்ச் சில நிபந்தனைகட்கு உடன்படுகிறார். அந்நிபந்தனைகளுள் ஒன்று கதர் தரிக்கவேண்டுமென்பது. வெற்றிக்குப் பின்னர் சகோதரர்க்தரைக் கனவிலுங் கருதுவதில்லை. தேர்தல் காலத்தில் மட்டும் அபேட்சகர் கதர் மயமாயிருக்கிறார்; பின்னே பழையபடி. கிளாஸ்கோ மயமாகிறார். இது குறித்து ஆங்காங்குள்ள காங்கரஸ் நிர்வாகிகள் என்ன செய்கிறார்கள்? இது பற்றியே இருபக்கத்திலும் நேர்மை இருத்தல் வேண்டும் என்று சொல்கிறோம்.

தமிழ் நாட்டில் சில ஜில்லாக்களில் ஜில்லா போர்டு தேர்தல்கள் நடைபெற்றன; மேலும் அப்போர்டு தேர்தல்கள் நடைபெறப் போகின்றன; வேறுதேர்தல்களும் நடைபெறும். தேர்தலில் வெற்றி யொன்றையே குறிக்கொண்டுள்ள சுயநலக்காரர் நான்கணுவுடனும் கதருடையுடனும், காங்கரஸில் சேர்ந்து ஆங்காங்குள்ள நிர்வாகிகளை வசப்படுத்தி அபேட்சகராகிறார்; வெற்றி பெறுகிறார்; பின்னே கதரைக் காற்றில் பறக்க விடுகிறார். இவர்கள் வாயிலாகக் கிராமங்களில் எப்படித் தேசிய உணர்வு பரவும்? கதர் தேசிய உணர்வுக்கு அறிகுறியன்றோ? காங்கரஸ் சார்பாக நின்று வெற்றி பெற்ற ஜில்லா போர்டு தலைவர்களிற் சிலரும், அங்கத்தவர் பலரும் கதர் உடையின்றி உலவி வருதல் ஆங்காங்குள்ள காங்கரஸ் நிர்வாகிகள் கண்களுக்குப் புலனாகாமலா இருக்கிறது? காங்கரஸ் நிர்வாகிகள் கவலை கதர் மீது இல்லை என்றே கொள்ளுதல் வேண்டும்.

அபேட்சகர்களைத் தெரிந்தெடுக்கும் போதே காங்கரஸ் நிர்வாகிகள் பெருங் கவலைசெலுத்தல் வேண்டும். நிர்வாகிகள் தயை தாட்சண்யத்துக்குக் கட்டுப்பட்டுக் கண்டவர்களைத் தெரிந்தெடுப்பதால் பின்னே காங்கரஸுக்கே இழுக்கு நேர்வதாகிறது. தற்போதுள்ள தமிழ் நாட்டுக் காங்கரஸ் நிர்வாகம் நன்னிலையில் இல்லை என்பது வெள்ளிடைமலை. அதைத் தூய்மை செய்ய வேண்டுவது தமிழ் நாட்டுக் காங்கரஸ்காரர் கடமை.

ஸ்தல ஸ்தாபனங்களால் எதிர்பார்க்கப்பெற்ற நலன்கள் பல. அந்நலன்கள் நடை முறையில் விளையவில்லை. நலன் விளைவியாத ஸ்தாபனங்களிருப்பதால்என்ன பயன்? அவைகளை ஒழித்து விடுவது நலம். இப்பொழுது கிடைத்துள்ள சீர்திருத்த முறைப்படி அமையப் போகும் மாகாண ஆட்சியில் இரட்டை ஆட்சி முறையில்லை; எல்லாம் மந்திரிகள் வயப்பட்டிருக்கும். இம் முறைப்பட்ட ஆட்சியில் ஸ்தல ஸ்தாபனங்கள் தனியே வேண்டுவதில்லை. அவைகள் அநாவசியம். ஆகவே அவைகளை ஒழித்து விடுவதே சிறப்பு.

ஸ்தல ஸ்தாபனங்கள் ஒழிந்தால் பல அரக்கச் செயல்களும் தீயொழுக்கமும் ஒழியும். ஸ்தல ஸ்தாபனங்களால் ஒழுக்கம் பெருகுகிறதா அருகுகிறதா என்பதைத் தேசத்தார் கவனித்து நடப்பாராக. ஒழுக்கத்துக்கு ஊறுசெய்யும் ஸ்தாபனங்கள் எற்றுக்கு?

ஸ்தல ஸ்தாபனங்கள் சார்பில் ஏராளமான பள்ளிக்கூடங்க ளிருக்கின்றன. அவைகள் ஸ்தல ஸ்தாபனத் தலைவர்கள் வயப்பட்டுக் கிடக்கின்றன. இன்னார் - இத்தகையவர் - தலைவராக வருதல்வேண்டும் என்னும் நியதியில்லை. தேர்தலில் எவரும் வரலாம். பள்ளிக்கூடம் இன்னதென்றும், ஆசிரியன்மார் தொழில் இத்தகையதென்றும் தெரியாத தலைவர் தெரிந்தெடுக்கப்பட்டால், பள்ளிக்கூடங்களின் கதியும் ஆசிரியன்மார் நிலையும் என்னகும்?

தொழில்களுள் சிறந்தது ஆசிரியத் தொழில். அத்தொழில் நடாத்துவோர் மதிப்புக்குரியர். அவ்வாசிரியன்மார் எப்படி நடத்தப்படுகிறார்? அந்தரங்கக் கூட்டங்கூட்டி ஆசிரியன்மாரை விசாரித்தால் பல உண்மைகள் வெளிவரும். இன்று இவ்வளவில் நின்றுவிடுகிறோம்.

## இடியேறு

### தாமஸ் நிலை

வரவு செலவுத்திட்ட விவரம் பார்லிமெண்ட் முன்னிலையில் கிளத்தப்படுதற்கு முன்னர், அது மந்திரிமாருள் ஒருவராகிய திரு. தாமஸ் மூலமாக வெளிவந்ததென்று சொல்லப்பட்டது. அது காரணமாக அவர் மந்திரி பதவியினின்றும் தாமே விலகினர். அவர் சட்டப்படி குற்றவாளியா அல்லவா என்பது அட்டர்னி ஜெனரலால் ஆராய்ச்சி செய்யப்பட்டது. சட்ட தண்டனைக் குள்ளாகும் முறையில் தாமஸ் குற்றமிழைக்கவில்லை என்று அட்டர்னி ஜெனரல் தமது கருத்தைத் தெரிவித்தார். அதனல் திரு. தாமஸ் போாபத்தினின்றும் தப்பிக் கொண்டார். இனி அவர் தமது செயலைப்பற்றிப் பார்லிமெண்டில் பேசுவார். மந்திரி பதவி போனலும் பார்லிமெண்டில் அங்கமாவது தாமஸ் பெற்றிருப்பாரா?

### தேசீய வீரர்

தேசீய வீரர் தயாப்ஜி இவ்வுலக வாழ்வை நீத்தனர். அவர் பரோடாவில் நீதிபதியா யிருந்தவர்; ஹிந்து முஸ்லிம் வேற்றுமை யறியாதவர்; உப்புச் சத்தியாக்கிரப் போரில் ஈடுபட்டுச் சேவை செய்தவர்; அஞ்சா நெஞ்சினர். வகுப்புணர்வேயின்றி அவர் தேச சேவை செய்தது சிறப்பாகக் குறிக்கத் தக்கது. அவ்வுணர்வுப் பெருக்கத்துக்கு இலக்கியமாக நின்ற ஒருவர் பிரிவுற்றது தேசத்துக்குப் பெரு நஷ்டமே யாகும். அவர் தம் பிரிவு குறித்து ஆற்றொணுத் துயருறுகிறோம். வீரர் தயாப்ஜியின் இன்னுயிர் சாந்தத்தில் திளைக்க.



## கதரும் காந்தியடிகளும்

### ஜவஹரின் கருத்து

கதர் விஷயத்தில் பண்டித ஜவஹர்லாலின் மனப்பான்மை சம்பந்தமாக வெளியான தவறான செய்தி குறித்து மகாத்மா காந்தி எழுதுவதாவது:—

"பம்பாய் காதி பந்தரில் ஜவஹர் பேசியதாக வெளிவந்த சில விஷயங்களை என்னல் நம்பமுடியவில்லை. ஜவஹரின் மனப்பான்மையை நான் அறிவேன். பத்திரிகைச் செய்தி அவர் மனப்பான்மைக்கு மாறாக விருந்தது கண்டு அப்பத்திரிகையை நான் ஜவஹருக்கு அனுப்பினேன். அவர் அதற்கு அனுப்பிய பதில் வருமாறு:—

"பம்பாயில் நான் பேசிய கூட்டங்கள் கணக்கிலடங்கா. பத்திரிகைச் செய்திகளைப்பார்க்க எனக்குநேரமில்லை. நான் ஹிந்தியில் பேசினேன். அச்செய்திகளைச் சுருக்கமாகவும் சரியாகவும் எழுதுவது நிருபர்களுக்குக் கஷ்டமாகவே யிருக்கும். கதரைப் பற்றி நான் சொல்லியதாக வெளிவந்த செய்தியைப் பார்த்த உடனேயோ மறுநாளோ திருத்தம் அனுப்பினேன்.

சமூகப் பொருளாதார அரசியல் வேலைத் திட்டங்களில் கதர் முக்கியமானதென்றும், அதற்கு ஆதரவளிக்க வேண்டுமென்றும் நான்கூறினேன்.

தற்கால சமூக ஏற்பாட்டில் கதரால் மாத்திரம் நமது வறுமை நீங்கிவிடாதென்றுநான்சொன்னதுண்டு. தொழிற்சாலைப் பெருக்கத்துடன் குடிசைத் தொழில்களும் பெருகலா மென்பது எனது எண்ணம். இக்காலத்தில் குடிசைக் கைத்தொழில்கள் முக்கியமானவையென்பதை நான் அறிகிறேன்."

பத்திரிகையில் வெளியான செய்திக்கும் மேற்கண்ட ஜவஹரின் கடிதத்திற்கும் உள்ளபேதம் வெளிப்படை. பொதுவாக உலகில்-அதிலும் சிறப்பாக இந்தியாவில்—பொதுஜன ஊழியர்கள் தவறான செய்திகளால் மிகுந்த கஷ்டத்திற் குள்ளாகிறார்கள். இந்திய மொழி யொன்றில் தலைவர்கள் பேசுவதைத் தந்தியில் அனுப்புவதற்காக நிருபர்கள் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கும் அவசியம் நேர்கிறது. முக்கியமான விஷயங்களில் திட்டமான செய்தி கிடைக்கும் வரை பொதுமக்கள் காத்திருத்தல் வேண்டும்.

பத்திரிகைச் செய்தி கதர் ஊழியர்களிடையே கலக்கத்தை உண்டுபண்ணியது. கிரியாம்சையில் ஜவஹர் கூறுவதெல்லாம் உண்மையே. தமக்கு நம்பிக்கையில்லா விட்டால் பிறரைத் திருப்தி செய்வதற்காக அவர் ஒரு வார்த்தைகூடச் சொல்ல மாட்டார். கதருக்குச் சாதகமான அபிப்பிராயத்தையே காங்கிரஸ் தலைவர் கொண்டுள்ளாரென்பது இப்பொழுது தெளிவாகி விட்டது. கதரைத் தொடாத பல தலைவர்கள் காங்கிரசுக்கு வெளியேயு மிருக்கிறார்கள். கதரில் நம்பிக்கையில்லாத பலர் காங்கிரசிலேயே யிருக்கின்றனர். இப்படி யெல்லாம் இல்லாவிடில் கதர் எவ்வளவோ முன்னேறியிருக்கும். கதரில் பண்டித ஜவஹருக்கிருக்கும் நம்பிக்கை திருப்தியைத்தருகிறது.

கதர் ஊழியர்களுக்கு ஏற்பட்டிருக்கும் பதினறு வருஷ அனுபவத்தில் அவர்களுக்குக் கதரின்மீது பூரண நம்பிக்கையிருக்குமென்றே நான் கருதுகிறேன், அப்படியின்றிப் பிறர் சொல்வதைக்கேட்டே அவர்கள் கதரை நம்புகிறார்கள் என்றால் ஒருபிரபல பத்திராசிரியர் சொன்ன பின்வரும் வார்த்தைகள் மெய்யாகும்.

'காந்தியடிகள் இறக்கும் நாளுடன் கதரும் சாகும்; அன்று உடைக்கப்படும் சர்க்காக்களைக் கொண்டே அவர் பிரேதத்தைத் தகனம் செய்து விடலாம்.'

கதர் ஊழியர்கள் நன்கு ஆலோசித்துக் கதர் விஷயத்தில் அவர்களுக்குத் திருப்தி யேற்பட. வில்லையானல் அவர்கள் தங்கள் மனப்பான்மையைத் தாராளமாக மாற்றிக் கொள்ளலாம்.

# இந்திய தேச தர்மத்தின் அடிப்படை

## தேசியத்தை எப்படி வளர்ப்பது?

### காலத்துக்குரிய உபதேசம்

:o:

அரவிந்தரின் அமிர்த வாசகம்

(தொடர்ச்சி)

அரசன் ஆட்சி செய்முறை

மேலே சொல்லியபடி ஆதிநிலைகளிலிருந்து படிப்படியாக இராஜ தர்மம் வரை இந்தியாவில் தர்மம்வளர்ந்து வந்தது. முன் இருந்த நிலையங்களையெல்லாம், ஆட்சிசம்பந்தமான சாதனங்களையெல்லாம், மன்னருக்குள்ளோ அல்லது சக்கிரவர்த்திக்குள்ளோ ஒழுங்கான நிர்வாகத்திற்குச் சமூகம்கொண்டு வந்திருக்கிறது. இதன் பயன் என்ன? புத்தியின் பலத்தைக் கொண்டு முடிவு செய்யப்பட்ட அரசியல் இலட்சிய முன்னேற்றமும் புரட்சிஇயக்கமும் ஐரோப்பாவில் முற்காலத்திலும் இக்காலத்திலும் வலுப்பட்டதுபோல் இந்தியாவில் பெருகவில்லை. இந்திய மனத்திலும் வாழ்க்கையிலும் பழைய வழிகளிடம் ஆழ்ந்த மரியாதை செலுத்தும் குணம் வளர்ந்து வந்தது; சமூகம் ஜீவிப்பதற்கு வேண்டிய ஒழுங்கான தர்மம் உன்னதமாகப் பெருகியது. இம்மட்டோ! உன்னத அறிவுப் பயிற்சியினல் சமூகம் ஜோதியுடன் நின்ற பல்லாயிரமாண்டிலும், ஜீவசக்திகள் அழியாமல் நின்று உறுதிபெறும் வழியில் மனேபலம் உபயோகிக்கப்பட்டு வந்தது. அமைதிநிலை கெடாதவாறு பழக்க வழக்கங்கள் தாமதமாகவே வளர்ந்து வருதல், சமூக அரசியல் உருவங்களை அழியாமல் காத்துவர முயலுதல் ஆகிய இவைகளே முன்னேற்ற வழிகளெனக் கொள்ளப்பட்டன. ஐரோப்பிய நாகரிகமானது சமூக வாழ்க்கையில்இயற்கை யழகைக்கெடுத்து,செயற்கைத்திட்டங்களை யுண்டாக்கியபடியால் உலகில் கொடிய ஏதேச்சாதிகாரமும் தொழிற்சாலைகளாலாகிய ராஜ்யங்களும் மலிந்து வருகின்றன. இந்த அசாதாரண விபரீதப் பயனை இந்திய அரசியல் உண்டாக்கவில்லை. புத்திபலத்தால் சமூகலட்சியங்கள் வளரவில்லை என்ற குறை ஒரு பக்கமிருந்தாலும், பகுத்தறிவையும் இயந்திரமாக்கும்இழிதன்மையும் இந்திய திட்டத்திலில்லை.

இந்திய மனேசக்தி

பகுத்தறிவை வளர்த்துப் பயிற்சி பெருகிய காலத்தில் கூட இந்திய சமூக மனம் தன் உள்ளுணர்வை இழக்கவே யில்லை; ஆதலால் அரசியல், சமூகத் துறைகளில் சிந்திக்கும்போது கூட, வாழ்க்கைத் தர்மங்களையும் ஆத்மசம்பந்தமான உள்ளுணர்ச்சிகளையும் சேர்த்துக் கொள்ளும் முயற்சியை இழவாமல் அவற்றை ஏற்றவாறு ஒழுங்குபடுத்தும் கருவியாக அறிவையும் சமூகதர்மம் பயன்படுத்திக்கொள்கிறது. எப்படியெனில், வாழ்க்கையில் உறுதிபெற்று விளங்கும் சக்திகளே அடிப்படையாகின்றன; தன் இலட்சியம் விரிவடைவதற்கு புத்தியை உபயோகிக்க விரும்பாமல், சமூகமானது உயர்ந்த ஆத்மானுபவ உண்மைகளையே உபயோகிக்கிறது;இந்த ஆத்மானுபவங்களே சமூக முன்னேற்ற வழிகளை நிச்சயிக்கும் என்றறிந்து, வழியிலுள்ள பலநிலைகளையும் சோதித்தறியும் கருவியாகவே அறிவை மதிக்கிறது.

இந்திய மனம், ஆத்மதர்ம விரிவே வாழ்க்கையென்றறிகிறது. சிருஷ்டிகர்த்தாவாகிய பிரம்மாவின் உடலே மனித சமூகம்; ஜனசமூகம் சமஷ்டி உடல் அல்லது நாராயணன்; தனி மனிதன் வியஷ்டி நாராயணன்; அரசன் தெய்வத்தின் பிரதிநிதி போன்றவன்; மற்ற நிர்வாக சாதனங்களெல்லாம் பிராகிருதமயமாகிய சமஷ்டி ஜீவனது இயற்கைச் சக்திகள் போன்றவை; சமூக வாழ்க்கையிலும் அரசியல் துறையிலும் வழங்கிவரும் பலவித பழக்கவழக்கங்களெல்லாம் சமூகத்தை ஒன்றாக இணைத்து வைக்கும் தெய்வ சக்தி பொருந்தியவைகளே.

சுதர்மம்

உலகவாழ்க்கைக்கும் மனித வாழ்க்கைக்கும் ஒழுங்கான வழி சுதர்மானுஷ்டானமென்பதே புராதன இந்தியர் கருத்து. மனிதன் தன் இனத்திற்கேற்ற இயற்கை வழிபற்றி நடக்க வேண்டும். அரசியல் நிர்வாக சக்தி இந்தச் சமூக தர்மத்திற்கு உதவிசெய்ய வேண்டும். தர்மத்தைக் காத்து நிர்வகிக்கும் பொறுப்பு மன்னருடையது. மனிதருக்கு வேண்டிய அவசியமான தேவைகளை நீக்குவதும் சுகானுபவங்களைக் கொடுப்பதும்கூட சமூகதர்மத்திலடங்கிவிடுகின்றன; ஆயினும் இவைகள் சன்மார்க்க மததர்மங்களுக் கடங்கியிருக்கவேண்டும். ஒரே அரசியலுக்குள் அடங்கியிருக்கும் ஜனங்கள் தத்தம் நிலைமைகளுக்கேற்றபடி பல தர்மங்களை யுடையவர்களா யிருப்பார்கள். இவற்றை அவர்கள் தாராளமாக அனுபவிக்க அவர்களுக்கு உரிமை வேண்டும். மற்றவர்களுடைய உரிமைகளிடம் ஆக்கிரமிப்பின்றிப் பொதுஜன நன்மை கெடாதவாறு நடந்துகொள்ளவேண்டிய கட்டுப்பாடு ஒன்றைத்தவிர வேறுகட்டுகள் தனிமனிதருக்கு ஏற்படுதல்ஆகாது.

அரசர் கடமை

ஜாதிகள், மதசமூகங்கள், சமாஜங்கள், ஒருசிறு பிரதேசத்திய பழக்க வழக்கங்கள் ஆகிய இவைகளுக்கு இடையூறு உண்டாக்கி இவை ஒழுங்காகத் தம் இயற்கைவழிச் செல்லாமல் தடைசெய்வது இராஜ்ய அதிகாரத்திலடங்காது; இது இராஜதர்மமன்று. மேலே சொல்லப்பட்டவைகளுக்கு உரிமைகொடுத்தாலே சமூகம் வளர்ச்சி பெறமுடியும். பொதுவாக ஜனசமூகத்திற்கு வெளியிலிருந்து விரோதங்கள் ஏற்படாமலும், உள்ளே பிளவுபட்டுச் சமூகம் அழியாமலும் பாதுகாப்பதே இராஜதர்மம். குற்றங்களை நீக்கி அமைதி யுண்டாக்கல், சமூகத்தில் தொழிலபி விருத்தியும் பொருளபி விருத்தியும் உண்டாகுமாறு உதவிசெய்தல், இக்காரியங்களில் பிறர்செய்ய முடியாத காரியங்களைச் செய்து அதிகாரம் நடத்தல் ஆகிய இவைகள் அரசரிடம் எதிர்பார்க்க வேண்டிய குணங்கள்.

அரசியல் தத்துவம்

இந்திய அரசியல் தத்துவம் இத்தன்மையது. ஒருபெரிய சமூகத்தில் பல கிளைகள்உண்டு; ஒவ்வொருகிளையும்தன் வாழ்க்கைக் காரியங்களை இயற்கை வழிபற்றி நடக்கும் உரிமை பெற்றது; ஆயினும் நன்றாகத் தெளிவாக்கப் பட்ட பொதுதர்ம உணர்ச்சியின் மூலம் ஒன்றாக இணைக்கப்பட்டு எல்லாம் ஒரே பெரிய சமூகமாகி நிற்கின்றன. இவ்விதம் இணைக்கும் காரியத்தை நன்றாக நிர்வகித்து ஒழுங்கு பெறச் செய்வது இராஜ்யதர்மம். ஆட்சியுரிமைகளும் சக்திகளும் சமூக விதிகளாலாகிய தர்மத்திற் கடங்கியவைகளே. இவ்விதம் வகுப்புகளுக்குள் சுதந்திரமும் சுயநிர்ணயமும் அடங்கிய ஆட்சிநிலையே இந்தியஅரசியல் இலட்சியமும் கொள்கையுமாகும். அரசர்பலம், ஜனசமூகம், அவைகளுள் அடங்கிய கிளைகள் ஆகிய எல்லாம்தர்மத்தால் கட்டுப்பட்டவைகளே.

சமூகவாழ்க்கையில் திறமான உருவங்களை அமைக்க முயல்வதன் கருத்தெல்லாம், அவற்றின் மூலமாக மனிதரது மனமும் ஆத்மாவும் பயிற்சி பெற்றுஇயற்கை நிலையினின்றுதெய்விக நிலைக்குச் செல்லவேண்டு மென்பதே.

## புதிய சட்டம் பெருவிலங்கே!

### விடுதலைபெற வழி

சென்னைக் கோகலே மண்டபத்தில் ஸ்ரீமான் ஜம்னுதாஸ் மேத்தா 'அடக்கு முறையால் ஒத்துழைப்பு' என்பது பற்றி ஓர் அரிய பிரசங்கம் செய்தார். அதன் சாரம் வருமாறு:—

புதிய சட்டம் செய்யப் போகும் காரியம் எவ்வளவு அபத்தம் என்று காட்டவே இத்தலைப்பெயரைக் கொடுத்துப் பேசமுன்வந்தேன். 1935-ம்வருட சட்டம் எப்படிப்பட்டதென்ற வர்ணனை இந்த வார்த்தைகளில் அடங்கும். தம் சகாக்களின் அறியாமையைக் கொண்டு ஸர் சாமுவேல் ஹோர் இச்சட்டத்தை நிறைவேற்றினர். இப்பெரிய சட்டத்தில் சாரமெதுவுமில்லை. ஒன்பது வருஷமுயற்சியின் பயனக நாம் முன்னிலும் கீழான நிலைக்கு வந்து விட்டோம். சட்டப்படி இந்திய மந்திரிகளுக்கு அதிகாரமேயில்லை. பொக்கிஷ மந்திரி அரசாங்கத்தின் பொக்கிஷதாராரயிருப்பார். மற்றவர் நிலையும் இப்படியே.

நல்லெண்ணத்தோடு ஒத்துழைத்தால்சுயஆட்சியை நோக்கி நெடுந்தூரம் செல்லலாம் என்று சொல்லப்படுகிறது. கொடுத்ததை வைத்துக்கொண்டு பிறகு அதிகம் கேட்கலாமென்று ஒரு கட்சி சொல்கிறது. என்கையில் சாணத்தைக் கொடுக்கவந்தால் நான் அதைக்கொள்ளவும் மாட்டேன்; அதிகம் கேட்கவுமாட்டேன்; அதைஒதுக்கித்தள்ளிவிடுவேன்.

ஏமாற்றம்

இந்தநூற்றாண்டில் இச்சட்டத்தைப் போன்றதொரு ஏமாற்றம் வேறில்லை; இது பிரிட்டிஷாருக்கும் தெரியும்; கெஞ்சுகிற இந்தியரை நம்பி அவர்கள் மோசம் போகவில்லை. 'இதோ விலைக்கு வாங்க மனிதர் உண்டு' என்று தங்கள் மனத்திற்குள் அவர்கள் சொல்லிக்கொள்வார்கள். மூன்றாம் ஜார்ஜ் மன்னர் காலத்திய முறையையே மறைமுகமாக அவர்கள் இத்தேசத்தில் கொண்டு வந்து புதிதாக ஒரு வகுப்பை உற்பத்திசெய்கிறார்கள். இவ்வகுப்பைச் சேர்ந்தவர் தம் வாழ்க்கைக்கென்றே அரசாங்கத்தோடு சேர்ந்து புதிய சட்டத்தைத் தாங்க வேண்டியவராவர். மற்றவர்கள் முரண்பட்டு வேலைசெய்தால் அடக்குமுறை வந்து விடும். தனி மனிதர்களும் வகுப்புகளும் விசேஷ சன்மானங்களால் வசமாக்கப்படுகிறார்கள். ஒன்பது வருஷ உழைப்பால் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் தாம் செய்ய விரும்பிய காரியத்தை இந்தியாவில் செய்துமுடித்தனர். பிரிட்டிஷார் ஜனங்களின் அன்பைக் கவர விரும்புவது நல்லது. ஆசை வார்த்தைகளால் மயக்குவதும் பொருந்தாத் திட்டத்தை வழங்குவதும் போற்றற்குரியனவல்ல.

செய்ய வேண்டிய தென்ன?

உடைத்தல், மறுத்துத் தள்ளல் என்ற சொற்களால் வீண்வாதங்கள் பெருகி வருகின்றன. வெள்ளம், பூகம்பம் முதலிய பெரிய தீமைகள் ஏற்படும்போது அவற்றைத் தள்ளுவோம் என்பது முடியாத காரியம். இத்தீமைகளைவிடப்புதுச்சட்டம் அதிகதீமையை உண்டாக்கவல்லது. சமூகத்தை வலம் இடமாகவும் மேல் கீழாகவும் குறுக்கு நெடுக்காகவும் இச்சட்டம் வெட்டித் தள்ளுகிறது. இதைக் கொண்டு வந்தவர்கள் எந்தக் காரியத்தை விரும்புகிறார்களோ அது ஏற்படாமல் சமாளிப்பது மாத்திரமே தக்க பரிகாரம்.

மந்திரி பதவியேற்றல் பெரிய சண்டைக்குக் காரணமாதலாகாது. எதைச் செய்தாலும் எங்கிருந்தாலும் அதிகார வர்க்கத்திற்கு நாம் கீழ்ப்பட்டவர் என்று கருதல் கூடாது. மகாத்மா காந்தியைப் பின்பற்றிச் சத்தியத்தைக் கைக் கொள்வோம். குருட்டு நம்பிக்கை கொள்ளாமல் புத்தியைஉபயோகித்துத் தேசபக்தியில் சிறந்தவர்களையே சட்ட சபைகளுக்கு அனுப்புதல்வேண்டும்.

## எகிப்திய இளைஞர் இயக்கம்

எகிப்திய இளைஞர் சங்கத் தலைவரா கிய ஆமத் ஹுசேன் இளைஞர்களது மனோ நிலையைப்பற்றிய பல விஷயங் களை வெளியிடுகிறார். அதிலிருந்து பின் வரும் கருத்துத் திரட்டப்படுகிறது:—

பிரிட்டனுடன் கௌரவமான ராஜி யேற்படுத்துவதில் நாங்கள் மற்றஅர சியல் கட்சிகளுக்குப் பின்வாங்கவில்லை. பிரிட்டனுடன் நட்புகொள்ளவும் அத் தேசத்திற்கு அவசிய மேற்படும் போது எங்கள் சாதனங்களை யெல்லாம் அதனிடம் சாதகத்திற்காக ஒப்பு விக் கவும் மற்றவர்களைப் போல் நாங்களும் விரும்புவோம். அவ்விதமே பிரிட்டிஷ் இராஜ்யப் பாதுகாப்பிற்கு வேண்டிய மார்க்கங்களை இரட்சிக்கவும் தயாரா யிருக்கிறோம். எங்கள் தேசத்திலுள்ள அந்நியர்களுக்கு விசேஷ உரிமைகள் நீங்குவதும் தேசத்திற்குப் பூரண அரசுரிமைச் சுதந்திரமும் வேண்டு மென்று நாங்கள் கேட்கிறோம். இத ஞல் பிரிட்டனுக்கும் நன்மையுண்டு.

இதாலிய - அபிசீனிய யுத்தகாலத் தில் சர்வதேச சங்க தத்துவங்களைப் பற்றி பிரிட்டனுக்கும் இதாலிக்கும் கருத்துவேற்றுமை ஏற்பட்டது. அப் போது எகிப்திய எல்லைப்பக்கம் இதாலி யர் லட்சம் துருப்புகளை அனுப்பி மேலும் சைன்யபலம் ஸ்தாபிக்கத் தயாராயிருந்தனர்.

அப்போது எகிப்துதேசநலத்தையும் அதன் அரசுரிமையையும் காக்கின்ற நட்புடன் பிரிட்டன் நடந்துகொண்டால் பிரிட்டனுக்குத் துணைசெய்யும் வழி யில் எகிப்து நிற்கக் கடமைப்பட்டது; அப்படியின்றி எகிப்தினிடம் பிரிட்டன் கௌரவமாக நடந்து கொள்ளா விட்டால் பிரிட்டிஷாருக்குத் துணை செய்வதென்பது நடவாத காரியம்.

### அந்நியர் உரிமை

அந்நியருரிமைகளைக் காக்கும் நீதி மன்றங்களை நீக்குவதால் பிரிட்டனுக் குப் பயம் ஏற்படக் காரணமில்லை. பிரிட்டிஷார் கட்டிலிருந்து எகிப்து விடு படுவதால் வேறு அந்நியருக்கும் இங்கு ஆதிக்கம் ஏற்படாது. இதற்குப் பிரிட் டன் துணை செய்தால் எகிப்தியர் அதற்கு நன்றி பாராட்டுவார்கள். இந்த அந்நியருரிமை என்பது எகிப்தியர் வெறுக்கத்தக்க தொல்லையே. இந்த உரிமைப்படி அந்நியர்களை எகிப்தில் எகிப்தியப் போலீஸார் கைதுசெய்தல் முடியாது; அந்நியர்க்கு வரிபோடுதல் முடியாது; எகிப்திய நீதிமன்றங்களும் அவர்களை விசாரித்தல்முடியாது. ஆத லால் அந்நியர்கள் தாராளமாகக்கேட்பா ரற்று எகிப்தில் குற்றங்களைச்செய்வது இலகுவாகும். இதனால் வெள்ளைக்காரர் சம்பந்தமாக நடைபெறும் பல குற்றங் களையும் நீக்க எகிப்திய அரசாங்கம் திறனற்றிருக்கிறது; எகிப்திய தொழி லாளரியக்கத்தை ஒழுங்கு படுத்தி அதை அந்நியர் துர்விநியோகம் செய்து கொள்ளாமல் தடுக்கவும் கஷ்டமேற்படு கிறது.

### சூடான் பிரதேசம்

சூடான் விஷயத்திலும் பிரிட்டன், எகிப்து என்ற இரண்டு தேசங்களும் ஒத்து நடக்கவேண்டும். எகிப்து சூடான்மீது ஆதிக்கம் செலுத்த விரு ம்பி அதைக்கேட்க வில்லை; எப்போ தும் எகிப்தின் முக்கிய அங்கமாகவே சூடான் இருந்து வந்திருக்கிறது. எகிப் தின் ஜீவநாடியாக இருக்கும் நீலநதி யின் தண்ணீர் சூடான் வழியாகவே வருகிறது. மேலும் இருதேசத்தவரும் பாஷையாலும் மதத்தாலும் பரம்பரை வழக்கங்களாலும் ஒற்றுமைப் பட்ட வர் ஆதலால் எகிப்தியர் குடியேறத் தக்க வசதியும் சூடானிலுண்டு. தற் காலம் எகிப்தியர் குடியேறக் கூடிய இடம் சூடான் ஒன்றே. ஆதலால் சூடானைஎகிப்தினின் றுபிரித்தலாகாது.

அப்படிப் பிரிப்பது சூடானுக்கும் நல்லதன்று. எகிப்தியரும் சூடான் வாசிகளும் பரஸ்பர நட்பையே தமக் குள் விரும்புவர்.

இப்போது சூடான் தேசத்திலுள்ள ஏராளமான மூலப் பொருள்களை அபி விருத்தி செய்யும் காரியங்களில் எகிப் திற்கு இடம் மறுக்கப்படுகிறது. 1924ல் பிரிட்டிஷாரது விருப்பப்படி சூடானிலிருந்த எகிப்தியப்படை நீக்கப் பட்டது. அதனால் இருதேசங்களுக்கும் நடந்துவந்த வர்த்தகம் தடைப்பட்டது.

### பரிகாரம்

இந்தக் கொள்கை இப்போது அவசி யம் மாறவேண்டும். எகிப்திற்கும் சூடானுக்குமே இம்மாறுத லவசிய மென்பது மாத்திரமல்ல; பிரிட்டன் தேசநலத்திற்கும் இது அவசியமாகி றது. சூடானில் பிரிட்டிஷாரது நலமும் அப்போது தான் பெரு கும். ஆதலால் எகிப்தும் பிரிட்டனும் சுதந்தர தேசங்களாக ஒத்துழைக்க வேண்டுமென்றே எகிப்திய இளைஞரி யக்கமும் இளைஞர் சங்கமும் மனப்பூர்வ மாக விரும்புகின்றன என்று நாங்கள் சொல்லமுடியும்.மற்றத் தேசத்தார்களை விட பிரிட்டிஷாரிடம் எகிப்தியர்களாகிய எங்களுக்கு அதிக மதிப்புண்டு; அவர் களுடைய குணங்களையும் நாங்கள் பாராட்டுகிறோம்.

இனி எங்கள் சங்க இலட்சியங்களையும் திட்டங்களையும் பற்றிச் சிறிது கூறுகி றேன். எகிப்தின் பழைய பெருமைக ளைப் புதுப்பிக்கவேண்டிய திட்டங்களை இளைஞர் சங்கம் ஏற்படுத்திக் கொண்டி ருக்கிறது. ஜனங்களுக்குக் கல்வி பரவச் செய்யவும் சமூகவாழ்க்கையைச் சீர்தி ருத்தவும் நாங்கள் விரும்புகிறோம். தொழிலாளர் நிலைமையை விருத்தி செய்வதும் எங்கள் திட்டங்களில் சேர்ந் திருக்கிறது. தொழிலாளருக்குச் சுக வாழ்க்கை வேண்டும். எகிப்து சுதந்தி ரம் பெற்று வாழ்ந்தால் பிரிட்டிஷ் சரக் குகளின் வர்த்தகம் இங்கே பெருகும்.

## பஞ்சாபில் ஓட்டர்கள் பதிவு

ஓட்டர்கள் பதிவு செய்வதில் நேரில் மனுக்களைச் சேர்க்கும் வழக்கமானது மோசத்தை நீக்கப் பரிகாரமென்று பஞ்சாப் மாகாணத்தில் நினைக்கப்பட வில்லை. சென்னையைப் போலவே, சில தகுதிகளுடன் கூடியவர்கள் ஓட்டர்கள் ஆவதற்கு மனுப் போடவேண்டுவது பஞ்சாபிலும் அவசியமே. ஆனால் மனுப்போடுவதில் சில பேதங்களுண்டு. படிப்பினால் தகுதிபெற்றவர் நேரிலோ மனிதர் மூலமோ தபாலிலோ மனுவை அனுப்பலாமென்பது பஞ்சாபில் விதி. ஆனால் "மனுதார் நேரில்அல்லது முறு நிர் முன்னிலையில்மனுச்செய்துகொள்ள முடியாமல் மனிதர் மூலமாகவோ தபா லிலோ அனுப்பவேண்டுமானால் அப் போது அவர் தாமே தம் கையால் மனுவை எழுதி அதில் மாஜிஸ்டிரேட், சப்ஜட்ஜ், ஹெட்மாஸ்டர் முதலிய எவ ரிடமாவது சாட்சி வாங்கவேண்டும்." இவ்வித சாட்சியத்தைப் பெற்ற பின் மனுதார் நேரில் வரவேண்டிய அவசிய மில்லை. பஞ்சாப் அரசாங்கத்தார் செய்த காரியத்தைச் சென்னை அரசாங் கத்தார்ஏன்செய்யக்கூடாது?—'ஹிந்து'

## பெண்ணா! பிள்ளையா?

பாரிஸில் 18 வயதான ஒரு பெண் கல்யாணம் செய்து கொள்ளப் போகும் தறுவாயில் நகர மேயரால் தடுக்கப்பட் டார். "நீ ஒருபையன். மணம் செய்து கொள்ள உனக்கு அனுமதி கொடுக்க மாட்டோம்" என்று மேயர் கூறினர். தமது வார்த்தையை உறுதிப்படுத்த அவர் ரிஜிஸ்தரையும் எடுத்துக் காட்டி னார். அதில் அப்பெண் பிறந்தபொழுது பிள்ளை யென்று பதியப் பட்டிருந்தது. 'பாரிஸ் டிரிபியூனல் சபை' யினர் கூடி அந்தப் பிழையைத் திருத்திய பின் னரே' அப்பெண்மணி மணக்க அனு மதிக்கப்படுவாராம்.

## சர்வதேச சங்கம்

சென்ற ஞாயிற்றுக்கிழமை மாலை சென்னைக் காங்கிரஸ் மாளிகையில் ஸ்ரீ ஜம்னுதாஸ் மேத்தா செய்த பிரசங்கத் தின் சுருக்கம் வருமாறு:—

சர்வதேச சங்கம் நல்ல எண்ணத் துடன் அமெரிக்கப் பிரஸிடெண்டு வில் ஸனால் யோசிக்கப்பட்ட போதிலும் அவர் வெறுத்து ஒடத்தக்கநிலையில் வல் லரசுகளால் அதுநிர்மாணிக்கப்பட்டது. இரண்டு பெரிய தவறுகளின் பேரில் அது நாட்டப்பட்டபடியால் அது தன் நிலையைக்காப்பாற்றிக் கொள்ள முடிய வில்லை. தோற்றுப்போன ஜர்மனிமீது தாங்கமுடியாத கடன் சுமையை ஏற்றி யது ஒன்று. இதையறிந்து இப்போது தன் இஷ்டப்படி வளருமாறு ஜர்மனி விடப்பட்டிருக்கிறது.

சர்வதேச சங்கம் அப்போதுள்ள நிலையை மாற்ற அதிகாரம் பெற வில்லை; அதாவது, வெற்றியுடன் கூடிய தேசங்கள் எந்தக் காலனிகளை வைத்திருக்கின்றனவோ அவற்றைப் பற்றிய தீர்மானம் சங்கத்தில் வரக் கூடாது என்பது. சங்க மேற்பார்வை யதிகாரத்திற்குப் புதியகாலனிகளே வந் தன. இவைகளும் பிரிட்டன், பிரான்சு போன்ற தேசங்களிடம் ஒப்புவிக்கப் பட்டன. ஆதலால் காலனிகளை அதி கம்பெற்று வெற்றி யடைந்த தேசங் கள் சங்கத்தை நிர்வகிக்கின்றன. இந் தியாவைப்போல் யுத்தத்தில் கலந்து வெற்றியை யளித்த தேசங்களைப் பற்றிய குறைகள் சங்க நிர்வாகத்தில் அடங்கமாட்டா. ஏனெனில் யுத்தத் திற்குமுன் அடையப்பட்ட நாடுகளில் சங்கம் குறுக்கிடலாகாதென்பது அடிப் படைநிபந்தனை. பாலஸ்தீனம்போல் புதி தாகக்கிடைத்த நாடுகளில் சங்கம் நிர் வாகம் செய்ய இடமுண்டு. ஆதலால் இப்போது பாலஸ்தீனத்தில் ஏற்பட் டுள்ள அராபிய யூத கலகத்தில் பிரிட் டன் தனியே பலாத்காரம் செய்ய நடுங்குகிறது.

இந்தியாவில் அவ்வித கலகம் எழு மானால் அக்கலகம் அடக்கப்படலாம். இதைப்பற்றி இந்தியா — சங்கத்தில் சேர்ந்த அங்கமாக இருந்தும்—ஜனீ வாவில் முறையிட அதிகாரம் பெறாது. யுத்தத்தில் ஜெயிக்கப்பட்ட மேற் பார்வை யதிகாரம் பெற்ற காலனி கள் இந்தியாவைவிட உயர்ந்த சுதந் திரத்துடன் விளங்குகின்றன. இந்த நிலை நீங்கினாலன்றிச் சங்கம் ஜீவிக்க முடியாது. சங்கத்தின் ஆதிகொள் கைகள் மாறி, ஏகாதிபத்தியத்திற் குட்பட்டுக் கிடக்கும் இந்தியா போன்ற நாடுகளும் மேற்பார்வையதி காரத்தில் அடங்கவேண்டும். பிறகு இந்தச் சுதந்திரமற்ற நாடுகள் படிப்படி யாகச் சுயஆட்சிபெறச் சங்கம் இடம் கொடுக்கவேண்டும். இப்படிச் செய்தா லன்றிச் சங்கம் நிலைப்பதுகஷ்டம்.

இப்போது ஐரோப்பிய தேசங்கள் அமைதியுடன் நிற்க ஒருவாறு சங்கம் உபயோகமாகிறது. ஆயினும் தாழ்த் தப்பட்ட நாடுகளும் சுதந்திரம் பெறும் வழியில் பிரிட்டன் முதலிய தேசங்கள் இறங்கினாலன்றி யுத்தம் வந்தேதீரும். ஐரோப்பிய தேசங்கள் கலக்கவேண்டிய அசியவமேற்படும்.

## ஸ்ரீ ஈடன் நம்பிக்கை

சென்ற சனிக்கிழமை இரவு பிரிட் டிஷ் அந்நிய நாட்டு மந்திரி ஸ்ரீ ஈடன் சர்வதேச சங்கத்தினிடம் இருக்க வேண்டிய நம்பிக்கையைப் பற்றிப் பின் வரும் கருத்தை ஒரு பிரசங்கத்தில் வெளியிட்டார்:—

"சங்கம் பலங்குறைந் திருப்பதால் எல்லா அங்கத்தினரும் ஆழ்ந்த கவலை செலுத்திச் சமீபத்தில் நடந்த காரியங் களை ஆராய்ந்துசமரஸமாக ஒரு முடிவு காண வேண்டும். இவ்வேளையில் பிரிட் டிஷாட்சியினர் ஈடுபட்டிருக்கின்றனர். சங்கத்து லட்சியம் காப்பாற்றப் பட வேண்டும். ஒவ்வொரு தேசமும் ஆக்கிரமிக்கும் குணமடங்கிய தேசீ யத்தை நீக்கிச் சமாதான வழியில் சண்டைகளைத் தீர்த்துக்கொள்ள முன் வரவேண்டும். இவ்வாறு செய்வது சங்கம் நிலைப்பதற்கு அவசியமாகும். பொதுவாக அமைதியைக் காப்பதே பிரிட்டிஷ் அந்நிய நாட்டுக்கொள்கையா யினும்இப்போது மேற்குஐரோப்பியத் தேசங்களின் அமைதி நமக்கு அதிக முக்கியமாயிருக்கிறது. அதற்காகவே ஜர்மனி ரைன்லாந்தில் சைன்ய பலத் தை அனுப்பிய காலம் முதல் சங்கவிதி களுக்கு அடங்கி மேற்கு ஐரோப்பிய நாடுகளுக்குள் ஒற்றுமைப்பான்மையை வளர்க்க நாங்கள்முயல்கிறோம். ஐரோப் பாவின் மேற்குப் பக்கம் ஜர்மனியுடன் சமரஸமாக ஒப்பந்தங்கள் செய்து முடிக்க முயற்சி செய்தாலும் மத்திய கீழ் ஐரோப்பாவில் ஜர்மனியின் கொள்கை தெளிவு படவில்லை. அதை யும் தெளிவு செய்ய ஜர்மனியைக் கேட்டிருக்கிறோம்."

## ஜவஹரின் அரிய மொழிகள்

பூனாவில்கூடிய குடியானவர்மகா நாடு ஸ்ரீஜவஹர்லால்நேருவுக்கு ஓர் உப சாரணைப் பத்திரமளித்தது. அப்போது ஸ்ரீ ஜவஹர் பதிலளிக்கையில, தற்கால ஆட்சிமுறையை மாற்றிப் பஞ்சாயத்து அரசாங்கமாக்கக் குடியானவர் சங்கங் கள் நாடெங்கும் ஏற்பட்டுப் பலம்பெற வேண்டுமென்றார். பூனா ஜில்லா போர்டாருக்குப் பதில் கூறும்போது ஸ்ரீமான் நேரு கூறியது வருமாறு:— "சமதர்ம திட்டத்தை நீங்கள் கைப் பற்றி, டாம்பீக வாழ்க்கையை நடத்து கிறவர்களுக்கும் ஏராளமாக சொத்து வைத்திருப்பவர்க்கும் அதிகமாக வரி போட்டீர்களானால் ஜில்லா வாசிகளை மேன்மை யடையச் செய்வதற்குப் பணம் கிடைக்கும். யுத்தத்திற்குப் பிறகு அதோகதியான வயன்னு நகர சபை இம்மாதிரியான சமதர்மத்தைக் கடைப்பிடித்தே சீர்திருந்தியது."

* * *

சென்ற ஞாயிற்றுக் கிழமை ஐக்கிய மாகாண அரசியல் மகாநாட்டில்தேசி யக் கொடியை ஏற்றுவித்துப் பண்டித ஜவஹர்லால் கூறியதாவது:—"தேசி யக்கொடி, நாம் நமது நாட்டிடத்தில் கொண்டுள்ள அன்பையும் ஆர்வத்தை யும் குறிக்கும் அடையாளமாகும். அக் கொடியின் கௌரவத்தைப் பாதுகாப் பது நமதுகடமை. நமதுநாட்டின் கொடிக்கு அவமரியாதை செய்யும் மனி தர் யாராயிருந்தாலும் - இந்தியரே யன்றி வேறு எந்நாட்டவரா யிருந்தா லும் - நண்பராயினும் - சுற்றத்தவரா யினும் - அவர் நமது கொடிய விரோதி களாவர்."

* * *

பூனாவில் ஐக்கியமாகாண அரசி யல்மகாநாட்டுவிஷயாலோசனைக் கமிட்டி யில் யுத்த எதிர்ப்புத் தீர்மானத்தைப் பிரேரித்து ஜவஹர் பேசியதாவது:— "லக்ஷ்மணபுரிமகாநாட்டில்நிறைவேறிய யுத்தஎதிர்ப்புத் தீர்மானத்தை இம்மா காண மக்கள் கவனிக்குமாறு இம்மகா நாடு — கேட்டுக்கொள்கிறது. சென்ற இரண்டு மாதங்களுக்குள் நடந்த சம்ப வங்களால் உலகம் யுத்தத்தைச் சமீ பித்திருக்கிறது."

* * *

ஸ்ரீ ஜவஹர்லால் நேருவின் தேகநிலை இப்பொழுது திருப்திகரமாக விருக்கிற து.அவரால் வேகமாகப்பேசமுடிகிறது.

* * *

அகிலஇந்திய காங்கிரஸ் அபேத வாதக் காட்சியின் வேலை முறைகளைப் பற்றி ஸ்ரீஜவஹருடன் கலந்து பேச அக்கட்சியின் காரியதரிசி ஸ்ரீமசானி பூனாவிற்கு வந்திருக்கிறார்.

* * *

சிந்து மாகாண காங்கிரஸ் கமிட்டி வேண்டுகோளுக் கிணங்கி ஸ்ரீ ஜவஹர் லால் நேரு ஜூலை மாதம் 10-ந் தேதி முதல் ஒரு வாரம் சிந்துமாகாணத்தில் சுற்றுப் பிரயாணம் செய்யச் சம்மதித் திருக்கிறார்.



## யுத்த மேகங்கள்

### இதாலியும் ஜப்பானும்

மற்றும் சில குறிப்புகள்

காண்டன் அரசாங்கத்தார், வடசீனா வில் துருப்புகளைச் சேர்க்கும் ஜப்பா னுக்கு விரோதமாகப் படைதிரட்ட அதிகாரப்பத்திரம் பிரசுரம் செய்திருக் கிறார். இதனால் சீனாவின் எந்தப் பாகங்களிலுமுள்ள தேசபக்தர்கள் இவர்கள் பக்கம் நிற்பார்கள். ஆயி னும் நான்கிங் அரசாங்கத்தாருக்கு இதனால் கஷ்டம் ஏற்படுகிறது. காண் டனுக்கு விரோதமாகச் சென்றால்தேச மக்கள் சீற்றம் பெருகிவரும். அப்படிச் செய்யாமல் அந்த அரசாங்கத்தாருடன் சேர்ந்து கொண்டால் ஜப்பானுக்குக் கொண்டாட்டம்.

* * *

தென்மேற்குச் சீன அரசியல் சங்கத் தார் ஜப்பானுக்கு விரோதமாகச் சைன் யத்தலைவர்களையும் நியமித்து விட்டார் கள். காண்டனிலுள்ள ஜப்பான் அதி காரிகள் அவசரம் நேரும்போதுஉடனே காலிசெய்யத் தயாராயிருக்குமாறு தங் கள் தேசமக்களை எச்சரிக்கை செய் திருக்கிறார்கள்.

* * *

காண்டன் அதிகாரிகள் பிரசுரித்த விளம்பரம் பிரசுர மாத்திரமே என் றும் யுத்தம் தொடங்க நான்கிங் அதி காரிகளுக்கே உரிமை உண்டென்றும் காண்டன் அதிகாரிகள் விளக்கி விட் டார்கள். ஜப்பான்மீது யுத்தம் நடத் தாமல் ஜப்பானியர் செலுத்தும் ஆதிக் கத்தை மாத்திரம் தடைப்படுத்துவதே காண்டன் ஆட்சியினரது விருப்ப மென்று அங்குச் செல்வாக்குள்ள டாக் டர் லோவன்கன் தெரிவிக்கிறார்.

* * *

மஞ்சூரியாவில் உள்ள ஜப்பானியப் படையைக் கிழக்கு சைபீரியாவிலுள்ள சோவியத் படைக்குச் சமமாக உயர்த்த ஏற்பாடாகி வருகிறது. இப்போதுள்ள சோவியத்படை இரண்டு லட்சத்திற்கு மேலிருக்கிறது. இதோடுகூட ஜப்பானி யக்குடிகளும் அப் பிரதேசத்திற்குள் அனுப்பப்படுகிறார்கள். இரண்டு மூன் றுவருஷங்களில் நிலையான படைபலம் மஞ்சுகோவின் உதவியால் ஜப்பானுக்கு ஏற்படக்கூடும்.

### ஹிட்லரின் யுத்த தந்திரங்கள்

யாருடன் போர்புரிய, ஹிட்லர் ஆயத்தம் செய்துகொண்டிருக்கிறார்? ரஷ்யாவுடனா? பிரான்ஸுடனா? அல் லது வேறு ஏதாவதொரு நாட்டின்மீதா?

ஹிட்லரின் பேச்சுக்களையும் எழுத் துக்களையும்நோக்குவோமானால், ரஷ்யா மீதே அவர் பாய்வாரெனத் தோன்று கிறது.

ஏராளமான நிலப்படையையும்,மிகப் பெரிய ஆகாயப் படையையும் கொண் டுள்ள அந்நாட்டின்மீது போர் தொடு க்க ஹிட்லர் இப்பொழுது துணிவாரா? ஜப்பான் மற்றொரு பக்கத்தில் ரஷ்யா வைத் தாக்கினாலொழிய இது முடியாத காரியம். ஜப்பான் ரஷ்யாவைத் தாக்கு வது சமீபத்தில் நிகழ இடமில்லை. பிரான்சுக்கும் ரஷ்யாவுக்கும் நெருங் கிய சம்பந்தமிருக்கிறது. ஆகவே இவ் விரண்டு நாடுகளும் ஒன்றுக்கொன்று உதவிபுரியக்கடமைப்பட்டிருக்கின்றன.

கூர்ந்து கவனிப்பவர்க ளெல்லாம் 'ஹிட்லர்முதலில் தெற்கேபிரவேசித்து ஆஸ்திரியாவை ஆக்கிரமித்துக் கொள் வார், பிறகு ஆஸ்திரிய சாம்ராஜ்ய நாடு களைப் பிடிப்பார்' என்று கூறுகின்றார்.

இத்தாலியப் பத்திரிகைகள் கூறு வதை நம்புவோமானால் ஹிட்லரின் நோக்கம் வேறாக விருக்கிறது. "சரி யான சமயத்தில் ஹிட்லர் முசோலினி யுடன் கூடிக்கொண்டு பிரிட்டனைத் தாக்குவார். அவரது தந்திரங்கள் முசோலினியின் தந்திரங்களை ஒத்தி ருக்கின்றன.முசோலினி சென்ற பத்து வருஷங்களாக வட ஆப்பிரிக்காவில் பிரான்சின் குடியேற்ற நாடுகளைப்பிடுங் கிக் கொண்டு இத்தாலிய சாம்ராஜ்ய மாக்குவதே தம் நோக்கமென்று பிர சாரம் செய்து வந்தார். அவரது காரி யங்கள் தயாரானதும்.லவாலுடன் ஒப் பந்தம் பேசிக்கொண்டு அபிசீனியாவுக் குள் புகுந்து கொண்டார்.

இதுபோலவே ஹிட்லர் கிழக்கேயும் தெற்கேயும் செல்லப் போவதாகச் சொல்லிக் கொண்டிருந்து முடிவில் பிரிட்டன்மீது பாயலாம். ஏனெனில் ஜெர்மனிக்கு வேண்டிய குடியேற்ற நாடுகள் எல்லாம் பிரிட்டனிடமே இருக்கின்றன.

### மத்திய தரைக்கடல் அடைப்பு

எதியோபிய யுத்தம் எதிர்பாராத பலன்களைக் கொடுத்து வருகிறது. சூயஸ் கால்வாய் அடைக்கப்படலாம் என்று பிரிட்டனில் வதந்தி பரவியதன் பயனாக இதாலியர் வேறு யோசனையி லிறங்குகிறார்களாம். பிரிட்டனைச் சேர்ந்த நிபுணரும் அது நடக்கு மென்று நம்பித் தென்னாப்பிரிகா வைச்சுற்றிச் செல்லும் வழியைப்பலப் படுத்த விரும்புகிறார்கள். இதாலிக்கும் ஆப்பிரிகாவுக்கும் இடையே கடலில் ஆறு மைல் அகல முள்ள ஓரிடத்தில் யந்திரங்களைக் கொண்டு தண்ணீர் மட் டத்திற்குக் கீழ் அடைப்பு எழுப்ப முஸோலினி திட்டம் போட்டுள்ளார். கடற் சுரங்க வெடிகள், வலைகள் முதலி யவை இதிற் சேரும். இந்த அடைப் பைத்தகர்க்க முயலும் யுத்தக் கப்பல் களின்மீது விமானங்கள் தயாராக குண் டுகளை வீசி அவற்றை அழித்து விடும். இதாலிக்கும் இங்கிலாந்திற்கும் யுத்தம் தொடங்கினால் இந்தத் திட்டம் உடனே நிறை வேறுமாறு சாதனங்கள் தயாரா யிருக்கின்றனவாம். இதுநிறைவேறி னால் பிரிட்டன் எகிப்துக்குப் போகமுடி யாது. மத்தியதரைக் கடல் கீழ்ப்பாக முள்ள பிரிட்டிஷ் கடற்படை மேற்கே வரமுடியாது. சூயஸ் கால்வாய் வழி யாக ஆப்பிரிக்காவைச் சுற்றிவரவேண் டியதாகும். அதனால் படை யுத்தகாரி யங்களுக்கு உபயோகப்படாது.

### ஜப்பான் துணியுமா?

சைன்யாதிகாரிகளால் நடத்தப்படும் ஜப்பானிய மந்திரிசபை ஆசியாகண்டத் தில் ஆதிக்கம் செலுத்த விரும்புகிறது. இதற்கு மூன்று வழிகளுண்டு. 1. வட க்கு மஞ்சூரியாவில் சோவியத் ஆட்சி யுடன் தைரியமாகப்போர் தொடங்கல். 2. மங்கோலியாவுக்குள் செல்லல். 3. சீனாவுடன் யுத்தம் தொடங்கல். முதல் திட்டம் முடியாதென்று சில மாதங் களுக்கு முன்பே கைவிடப்பட்டது. சோவியத் ஆட்சியினர் மங்கோலிய சோவியத் ஆட்சிக்குத் துணை செய்வ தாக உறுதி கூறிவிட்டனரென்று ஸ்ரீ ஸ்டாலின் டோகியோ அதிகாரிகளிடம் எச்சரிக்கை செய்துவிட்டார். ஆதலால் இரண்டாவது திட்டமும் உபயோக மில்லை. மூன்றாவது திட்டத்தில் ஜப் பான் இறங்கியிருப்பதாகத் தோன்று கிறது.

இங்கும் ருஷியா குறுக்கிடும் போலி ருக்கிறது. ருஷிய உதவியால் மாத்திர மே சீனா தப்பமுடியுமென்று நான்கிங் கண்டுகொண்டதென்னலாம். ஷியாங் கே ஷேக்கிற்கு அடுத்தபடி தளகர்த் தாக இருக்கும் மார்ஷல்பெங் (Feng) இந்தக் கொள்கையைத் தாராளமாகவே தாங்கி நிற்கிறார். நான்கிங் அரசாங்கம் இக்கொள்கையை ஏற்றுக்கொண்டால் சீனாவெங்கும் ஐக்கியமேற்பட்டுவிடும். அப்போது காண்டனும் ஜப்பானை எதிர் க்க நான்கிங்குடன் ஒன்று சேரும். சோவியத் ஆட்சினர் துணையும் சேர்ந் தால் இரண்டு சீன அரசாங்கங்களும் ஜப்பானை இலகுவில் எதிர்க்கும்.மங்கோ லிய முயற்சியினின்று ஜப்பான் பின் வாங்கியதற்குக் காரணம் சோவியத் அரசாங்கமாதலால் நான்கிங் அரசாங் கத்தாரும் தளகர்த்தர் பெங் போதிக் கும் கட்சியைச் சீக்கிரம் ஏற்றுக் கொள்ளநேரிடலாம்.அப்போது ஆசியா வில்செல்வாக்குப் பெறும் ஆசையை ஜப்பான் இழக்கவேண்டியிருக்கும்.

—'ஸண்டே டைம்ஸ்'

## அன்னையின் அன்பு

(திரு - மன்றவாழ்நன்)

சீர்சான்ற தமிழகத்தே புத்துணர்ச் சியும் புதுமணமும் வீச, நம் நாட்டு மக்களைத் தட்டிஎழுப்பித் தக்க வின்ன தகாதன வின்ன என்பதை நேரிய முறையில் அவ்வப்போது அன்பு முறையில் விளக்கி வாலிபர்குழாத்தும் தொழிலாளர் இயக்கத்தும், பொரு ளாதார முறையையும் - உலகம் போற் றும் காந்தியடிகளார் அறநிலைப்போரின் அமைதியின் நிறைவையும் - பொதுமக் கட்கு நன்கு எடுத்துக்காட்டி நம்மவர் களை விழிப்பெய்தும்படி செய்வித்த வள் நம் அரும்பெரும் அன்னை 'நவ சக்தி'யாவள்.

நம்பெருந்தகைச் செல்வியின் ஆசிரி யர் திரு. வி. க. அவர்களின் அரசி யற் றொண்டின் அமைதியின் முறை யையும், சமயசமூக நலன் கருதி ஆங் காங்குக் கூடிய பாபேரவையின்கண் சொற்பொழி வாற்றிய தலைமைப் பே ருரைகளையும்,பொது நலத்தொண்டின் திறனையும் தமிழ்மக்களாய பொதுமக் கள் யாவரே இனிதுகண்டுபோற்றுதார்? இன்னணம் பெருமை வாய்ந்த பெரி யாரை ஆசிரியராகக் கொண்டு சில வாண்டுகளுக்கு முன் "தேசபக்த" னென்னும் சிறிய தினசரியொன்று தோற்றுவிக்கப் பட்டது. 'தேச பக்தன்'ல் உற்ற பொதுமக்களின் விழி ப்பு அளப்பரிது. 'தேசபக்தன்' அடக்குமுறைக்கு ஆளாயது தமிழருக் குத் தெரியும்.

பின்னே 'நவசக்தி' யென்னும் அன்னை நந்தண்டமிழ் நாட்டில் வீறிட் டெழுந்து நம்பால் மலிந்து கிடந்த அழுக்காறனைய தீயகுணங்களை அறவே விலக்கிச் சமயசமூக முற்போக்குக்கான ஒற்றுமை, சமரசம்,சன்மார்க்கம், சமத் துவம், சகோதரத்துவம் முதலிய புனி தமான கொள்கைகளை ஊட்டி உணர்ச் சியைப் பெருக்கி வருவாளாயினள். அவ்வமயம் இந்தியத் தேசியமகா சபையாம் காங்கிரஸில் சிறிது பிள வேற்பட்டது. அப்பிளவிற்கு உத்தம தேசபக்தர் ஸ்ரீமான் சி. ஆர். தாஸ், டாக்டர் கிச்லு முதலிய மாபெரும் தலை வர்களே காரணர். சமீபத்தில் வரப் போகும் புதிய அரசியலில் எதிர்காலத் தில் காங்கிரஸ் உத்தியோகம் ஏற்பதா? அன்றி விலகி நிற்பதா? என்றபிரச்னை தூயஅரசியல் வாதிகளிடம் இன்று முளைத்திருப்பதே போல் அன்றும் இந்திய விடுதலைக்குத் தேசீய காங்கிரஸ் சட்டசபைகளிற் கலந்து சர்க்காரின் எதேச்சாதிகாரத்தை பெரிதும் தடைப் படுத்த வேண்டுமென்பது ஸ்ரீமான் தாஸின் கருத்தாயிருந்தது. இம்முறை யை டாக்டர் கிச்லு முதலாயினோர் பெரி தும் எதிர்த்துப் போராடுவாராயினர். முடிவில் காந்தியடிகளின் அனுமதி ஸ்ரீ மான் தாஸுக்குக்கிடைக்க அவர் சட்ட சபையில் சுயராஜ்ஜியக் கட்சியை ஸ்தா பித்தார். அன்று நம் அன்னை நம்பால் நடுநிலையோடு எடுத்துக் காட்டிய அற வுரைகளை யாவரே மறுத்தற்குரியார்?

பின் (1929-30-ம் ஆண்டு) காந்தியடி களால் சாத்வீக சட்டமறுப்புப்போர் (அதாவது உப்புச்சத்தியாக்ரகம்) ஆர ம்பமாயிற்று. அப்போது நம் அன்னைக் குச் சர்க்கார் அவசர அச்சுச் சட்டத் தின்கீழ் ரூ. 2000 ஜாமீன் விதித்தனர். நம் அன்னையார் அஃதி ஜாமீன் தொகை யைத்தருவதற்குச் சம்மதமின்மையா லும், இன்னும் சில காரணங்களா லும் சில ஆண்டுகளாக நமக்குக் காட்சி கொடாது மறைந்திருந்தனள்.

அன்பர்களே! நம்பரிதாப நிலைமை யைஉணர்ந்தே நம் அன்னை இவ்வாண்டு நமக்குப் பூரணகாட்சி கொடுப்பதற்கா யினள். தமிழன்பர்களே! எழுங்கள்!! நம்அன்னையின் அருள்மொழியைக் கேளுங்கள். அன்னைக்குச் செய்யும் அரும்பணிகள் நம்பாற் பல உள்ளன. அவற்றை இன்றே செய்தற்கு முற்படுங்கள். திரு. வி. க. அவர் களும் செந்தமிழ்ப் பெருமாட்டி 'நவசக்தி' யன்னையும் பல்லூழிகாலம் நெடிது வாழ எல்லாம்வல்ல இறைவன் நல்லருள் கொடுத்து மகிழ்விப்பானாக.

## இதாலியின் பலம்

'டெய்லி டெலிகிராப்' பத்திரிகை யின் நிருபருக்குப் பேட்டி கொடுத்து எதியோப்பிய மன்னருக்கு இராணுவ மந்திரியாயிருந்த துருக்கிய தளகர்த் தர் வாஹேப் பாஷா பின்வரும் கருத் தைத் தெரிவித்தார்:—

"யுத்தம் முடியவில்லை. அபிசீனியப் படைகள் எங்குமிருக்கின்றன. அபி சீனியாவை இதாலி காலிசெய்யுமாறு பிரிட்டனும் பிரான்சும், தங்கள் நலத் திற்கே, முயற்சியெடுத்துக் கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் இரண்டு மாதங்களில் பத்துலட்சம் அபிசீனியப் படைகளைச் சீனர் முஸோலினி தயார் செய்ய முடியும். இப்போதே ஐந்துலட் சம்பேர் இத்தாலிய அபிசீனியப்படையி லிருக்கின்றனர்.இவர்களுக்கு வேண்டிய தளவாட சாதனங்கள் கிடைத்தால் இந் தப் படையே லிபியாவிலுள்ள இதாலிய படைகளுடன் சேர்ந்து சூடானுக்கும் எகிப்துக்கும் ஆபத்தையுண்டாக்கும். அபிசீனிய வடக்குப் படைகளுக்கு லஞ் சம் கொடுத்தே இத்தாலியர் வெற்றி பெற்றனர். அவ்வாறு முடியாமலிருந் தால் மழைக் காலத்தில் அபிசீனியர் களுக்குப் பலமதிகரிக்க இடமுண்டு."

## பண்டிதரின் விளக்கம்

* * * * முதலாவது, பண்டிதர் அவரது ஸோஷலிஸத்தைப் பலாத்கார மின்றியே ஏற்படுத்தப் பார்க்கிறார். இரண்டாவது, இந்த ஸோஷலிஸம் இந்தியா பூரண சுயேச்சை அடைந்த பிறகு இந்திய மக்களால் ஏற்றுக்கொள்ளப்பட வேண்டியது. மூன்றாவது, ருஷியாவிலிருந்து அங்கு அனுஷ்டித்த முறைகளை யெல்லாம் அப்படியே இந்தியா ஏற்றுக்கொள்ள வேண்டியதில்லை. நான்காவது, கதர் மக்கள் வறுமையைப் போக்கும் முடிவான சாதன மில்லையாயினும், தற்சமயம் கதர் ஒன்றே மக்களுக்கு அரசியல், பொருளாதாரத் துறைகளில் நன்மை செய்யக்கூடியது. ஐந்தாவது, தனிப்பட்டவர்கள் சொத்துரிமையைப் பறிமுதல் செய்தல், அதற்கு நியாயமான நஷ்டஈடு கொடுப்பது. ஆறாவது, தேசத்தின் தற்போதையபிரச்னை 'சுயேச்சையைப்பெறுவது ஸோஷலிஸமல்ல' என்பது. ஏழாவது, ஸோஷலிஸத்தில் மதமும்கலைகளும் பதிக்கப் படமாட்டா. எட்டாவது, பண்டிதரின் ஸோஷலிஸம் உற்பத்தியாகும் உணவுப் பொருள்களை எல்லாருக்கும் சமமாக வினியோகிக்க வேண்டும் என்ற கருத்தைக் கொண்டது. தனிப்பட்டவர்கள் சுய லாபத்திற்காகப் போட்டி போட லாகாதென்பது. ஒன்பதாவது, சர்வஜன வோட்டுரிமையையும் ஜனநாயகத்தையும் பண்டிதர் ஏற்பார் * * * *.

—'தாருல் இஸ்லாம்'

### தடை முறை செய்யும் வேலை

நஷ்டம் இந்தியருக்கே

இந்தியாவிலிருந்து இதாலிக்கு அனுப்பப்பட்ட சரக்குகளுக்கு ரோமிலுள்ள பணமாற்று நிலயத்தார் தேவையான பவுன் நாணயங்களைச் செலுத்த சக்தியற்றிருக்கிறார். அதற்குப் பதிலாக அன்றாடம் ஏற்படும் காலக்கிரயப்படி இதாலிய நாணயங்களை இவர்கள் கணக்கில் வைத்துக் கொண்டு இந்தியாவுக்கு அனுப்பப்படும் சரக்கு விலைகளுக்குக் கொடுப்பார்களாம். ஆனால் 1935-ம் ஆண்டு நவம்பர் மாதம் 23-ந் தேதி இந்திய வர்த்தகர் இதாலிய சரக்குகளை வாங்கிக்கொண்டு வரமுடியாது. இதனால் இந்தியவர்த்தகர்கள் கஷ்டமடைகிறார்கள்.

### அப்பாஸ் தயாப்ஜி காலமானார்

மாகாத்மா தந்தி

தீவிர காங்கிரஸ் வாதியான ஜனாப் அப்பாஸ் தயாப்ஜி சென்ற செவ்வாய்க்கிழமை மாலை இதயநோயால் இறந்தார். அவருக்கு வயது 82. இச்செய்தி கேட்டதும் மகாத்மா காந்தி தயாப்ஜியின் மகளுக்கு பின்வரும் தந்தியை அனுப்பினார். "எனது உற்ற நண்பர்களில் ஒருவர் போனார். உமக்கும், தாயாருக்கும் உண்டான துக்கத்தில் நானும் கலந்து கொள்கிறேன். உம் தகப்பனார் குஜராத்தின் பெருங்கிழவராக இருந்தார்; தேசத்தின் உண்மை ஊழியர்; ஹிந்துவுக்கும் முஸ்லிமுக்கும் யாதொரு வேற்றுமையையும் அறியாதவர். சர்தார் முதலிய யாவரும் துக்கத்தில் என்னுடன்கலந்து கொள்கிறார்."

### திருச்சியும் ஸ்ரீ சத்தியமூர்த்தியும்

டாக்டர் சாமிநாத சாஸ்திரியின் தலைமையில் சென்ற வாரம் திருச்சியில் ஒரு பொதுக் கூட்டம் நடந்தது. ஸ்ரீ சத்தியமூர்த்தி திருச்சி நகர சபைத் தேர்தலைப்பற்றிப் பேசினார். ஆனமலையில் பேசியதுபற்றியும் சேலத்தில் சுயமரியாதைக் காரர்களை அடித்ததுபற்றியும் பலர் கேள்வி கேட்டனர். அதனால் திகிலடைந்து நடுக்குற்றுச் சத்தியமூர்த்தி கூட்டத்தை விட்டு ஓடினார்.

## பெண்கள் கண்டனம்

விசாகப்பட்டினத்தில் ஸ்ரீமதி தர்லி சுபத்திரம்மா தலைமையில் பெண்கள் கூட்டம் ஒன்று நடைபெற்றது. ஸ்ரீ சத்தியமூர்த்தி தமிழ்நாட்டுக் காங்கிரஸ் கொள்கைக்கு விரோதமாகப் பிரிட்டிஷ் ஆட்சிக்குட்பட்ட சுயராஜ்யமே காங்கிரஸின் கோரிக்கை யெனக் கருத்துத் தோன்றுமாறு ஆனமலையில் ஐரோப்பியர்களிடையே பேசியதையும், ஜவஹர்லாலின் கொள்கைகளுக்கு மாறாக அபேதவாதம் அஹிம்சா மார்க்கத்திற்கு விரோத மானதென்று பிரசாரம் செய்வதையும் கண்டித்துப் பலர் பேசினர். ஸ்ரீ சத்தியமூர்த்தி மீது தக்க நடவடிக்கை யெடுத்துக் கொள்ளுமாறு ஸ்ரீ ஜவஹர்லால் நேருவைக் கேட்டுக்கொள்வதாக ஒருதீர்மானம் நிறை வேறியது.

### மகாத்மா ஊர்திரும்புகிறார்

மகாத்மா காந்தி ஜூன் 12-ந் தேதி மாலை பெங்களூரைவிட்டுப் புறப்படுகிறார். மறுநாள் காலை சென்னையில் கிராண்டுடிரங்க் எக்ஸ்பிரஸில் ஏறி வார்தாவுக்குப் பிரயாண மாவார்.

### கடந்தைத் தமிழ்ச் சங்கம்

(பெண்ணாகடம்)

ஆண்டுவிழா நிகழ்ச்சிகள்

6, 7-6-36 சனி, ஞாயிறு ஆகியஇரு நாட்களிலும் இத்தமிழ்ச் சங்கத்தின் இரண்டாம் ஆண்டுவிழா இவ்வூர்ப் பள்ளிக்கூடத்தின்கண் நிகழ்ந்தது. தலைவர் திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டார் முன்னுரையாக, தமிழ் மொழியின் பழமையையும், சிறப்பையுங் குறித்துப்பேசினார். பின்னர், முறையே வித்துவான் - வி. சிவக்கொழுந்து "பாரதியும் தமிழும்" என்றபொருள் பற்றி இன்னிசையோடு பாரதியின் பாடல்களைப்பாடி விரிவுரைஇயற்றினர். திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை "ஏது ஆவது" என்ற பொருள் பற்றித் தற்காலத்திற்கு இன்றியமையாது வேண்டப்படும் தாய்மொழிப் பற்று, தெய்வத் திருநெறி யன்பு முதலியவற்றைக் குறித்து கேட்போர் வியக்கும் வண்ணம் மிக இனிமையாக சொற்பொழிவு ஆற்றினர். தலைவர் முடிப்புரையுடன் முதனாள் கூட்டம் இனிது நிறைவேறியது.

7-6-36 மாலை 4 மணிக்கு 2-ம் நாள் கூட்டம் துவக்கப்பட்டது. தலைவர் முன்னுரையில், தாம் இன்றியமையாது உடன் ஊருக்குச் செல்ல நேர்ந்தமையின், கும்பகோணம் துரைத்தனக் கல்லூரித்தமிழ் விரிவுரையாளர் திரு. அ. கந்தசாமிப் பிள்ளை தலைமை தாங்குவார் எனக் குறித்து விடை பெற்றனர். பின்னர், "தமிழுக்கு ஹிந்தியால் நன்மையா? தீமையா? என்பது குறித்து அ. இரத்தினசபாபதிப் பிள்ளை, பி.ஏ., பி.எல்., ஆர். விசுவநாதன், பி. ஏ.(ஹானர்ஸ் மாணவர்) முருகுஇலக்குவர், வை. வேங்கடாசலம் முதலியவர் சொற்போர் நிகழ்த்தினர். பின்னர் கி. கு. நாராயணசாமி நாயுடு "தமிழ் வளர்ச்சிக்குரிய வழிகள் யாவை?" என்பது குறித்துச்சொற்பொழிவு நிகழ்த்தினர், லால்குடித் தமிழாசிரியர் - வித்துவான் - அ. மு. சரவண முதலியார் "மாது சொன்ன சூளால் இளமை துறக்கவல்லார்" என்றபொருள் பற்றிக் கேட்போர் வியக்கும் வண்ணம் சொன்மாரி பொழிந்தார். வித்துவான் - வி. சிவக்கொழுந்து "இசையரங்கு" நடத்தினர். தலைவர் முடிவுரையில் "ஹிந்தியால் தமிழுக்கு தீமையே" என்றும், தமிழைஒவ்வொருவரும் போற்றவேண்டுமென்றும் கூறி "உண்மைத்தமிழன் எவன்" என்பது குறித்து விரிவுரை செய்தனர். முடிவில் நன்றிகூறவும் வாழ்த்துப்பாடல் நிகழவும் விழா இனிது நிறை வெய்தியது என்று அமைச்சர் எழுதுகிறார்.

## 'ஏழையுடன் ஒருநாள்'

சிறு கதை

('சக்தி தாசன்')

முருகனுக்கு வயது 25. அவன் பரம சாது; வீண் வம்புகளில் தலையிட மாட்டான்; யாருடனும் அதிர்ந்து பேசமாட்டான். பொய்சூது, முதலியன அவனிடம் கிடையா. குடியென்பதே அவனுக்குத் தெரியாது. சென்னை இரும்புத்தொழிற் சாலையில் அவனுக்குவேலை. மாதம் 15 ரூ. சம்பளம். அன்று என்னமோ அவனுக்குப் போதாக் காலம். மேஸ்திரிக்கும் முருகனுக்கும் ஏதோ சச்சரவு ஏற்பட்டது. அதன் பயனாக முருகனுக்கு வேலை போயிற்று. முருகன் ரோஷமுள்ளவன். முருகனின் மேஸ்திரி முருகனது கிராமத்துக்குப் பக்கத்து ஊர்க்காரன். அவன் முருகனைப் பற்றி—அதுவும் அவன் மனைவி—அஞ்சலையைப் பற்றி—இழிவாகப் பேசுவதென்றால்? முருகனால் பொறுக்க முடியவில்லை. பாவம்! அவனைக் குறைசொல்ல நமக்கு வாய் ஏது? எல்லாம் அன்று அவன் விழித்த வேளை.

* * *

பகல் 12 மணி நேரம். மே மாதம் வெயில் தாங்க முடியவில்லை. பக்கத்தில் நிழலுக்கு ஒதுங்க மரங்களும் கிடையா. காலில் ஓர் அறுந்த பழைய செருப்பு. வெயிலுக்குப் பிடித்துக் கொள்ளக் குடையுமில்லை. கடற்கரை ரஸ்தா வழியாக ஒரு மனிதன் நடந்து வருகிறான். விரைந்து நடக்கவுமில்லை. சிறிது தூரம் நடப்பான்; பிறகு எதையோ நினைந்து பெரு மூச்சு விடுவான்; அடிக்கடி ஆகாயத்தை அண்ணாந்து பார்ப்பான்; கைகளை விரிப்பான்; சூரியனைப் பார்ப்பான்; சற்று நிற்பான்; பிறகு பெருமூச்சு விட்டு நடப்பான்; அவன்தான் முருகன். கையில் 'டிப்பன்' பாத்திரம். பகலில் சாப்பிடுவதற்காகக் கொண்டு போன சாதம் அதிலிருக்கிறது. முருகனுக்குச் சாப்பிடவே தோன்றவில்லை.

* * *

ஆறு வருஷங்களுக்கு முந்திய நிகழ்ச்சிகள் அவன்மனக்கண் முன்நின்றன. தென்னந் தோப்பில் அஞ்சலையைச் சந்தித்தது. "நாம் இரண்டு பேரும் கண்ணாலம் பண்ணிக் கொண்டால் ஊரில் திட்டுவார்களே...." என்று அவள் சொன்னது; "ஆ! இதற்கு நான் அஞ்சுவேனா! நம் இரண்டுபேருக்கும் பிரிய மாய்ச்சு. எனக்கும் உனக்கும் சரிவயசுதான். ஏன்! கண்ணாலம் பண்ணினால் என்ன? அஞ்சலே! பயப்படாதே. பட்டணத்துக்குப் போய் எங்கியாகிலும் சம்மட்டி யடித்து உன்னைக் காப்பாற்ற மாட்டேனா!" என்று அவன் சொன்னது:—எல்லாம் சினிமாப் படம்போல் அவன் கண்ணுக்குத் தோன்றின.

* * *

அன்று காலையில் அவன் வேலைக்கு வரும்பொழுது ஆறு வயதான அவன் மகள் கண்ணாயி ஓடிவந்து காலைக் கட்டிக் கொண்டு "அப்பா! எனக்கு ஒரு பாவாடை வாங்கி வராயா? அப்பா! நான் எத்தனை நாள் கேக்கறேன். மறவாதே! அப்பா! கட்டாயம் வாங்கி வா" என்று கெஞ்சிய வார்த்தைகள் அவன்காதில் ஒலித்தன. கண்களிலிருந்து கடகடென நீர் பெருகிற்று.

* * *

தன் விதியை நினைப்பான்; பெருமூச்சு விடுவான்; பூரண கர்ப்பிணியான தன்மனைவி அஞ்சலையை எண்ணுவான். அவளை எவ்விதம் காப்பாற்றுவதென ஏங்குவான். 'வேலை போயிற்றே' என வருந்துவான். 'இதை எப்படி அஞ்சலையிடம் சொல்வ' தென்று கண்ணீர் விடுவான். தன் பெண் 'கண்ணாயி'யை நினைப்பான். காலையில் அவள் பாவாடைக்காகக் கெஞ்சியதை நினைக்கஅவன் உள்ளம் குமுறும்; கண்கள் நீரைக் கக்கும். இதயம் துடிக்கும். கால்கள் ஓயும். 'உங்' என்று பெரு மூச்சு விடுவான். வெறுங்கையுடன் தன் மகள்—அருமைப் பெண்—ஆறுவயதுக் குமாரி 'கண்ணாயி'யை — எவ்வாறு காண்பதென நினைப்பான். ஆவலுடன் ஓடிவரும் குழந்தைக்கு எப்படி ஆறுதல் சொல்வதெனத் தவிப்பான். எல்லாவற்றையும் உதறித் தள்ளி விட்டாலோ இரவு சாப்பாட்டுக்கு என்ன செய்வதென ஏங்குவான். அம்மம்மா! முருகன் அப்பொழுது பட்ட பாடு நம்மால் சொல்ல முடியாதது. தாளம் படாதுதறி படாது. புயல்காற்றி லகப்பட்ட நாணல்போலத் தவித்தான். வால் அறுபட்ட பல்லிபோல் துடித்தான்.

* * *

அஞ்சலை — அவள் நல்ல பெண்; இளகிய நெஞ்சுடையவள்; யார் எது சொனனாலும் பொறுக்க மாட்டாள்; உடனே அழுதுவிடுவாள். அவளுக்கும் முருகனுக்கும் சரிவயதுதான். முருகனும் அஞ்சலையும் ஒருவர் மேல் ஒருவர் கொண்ட அன்பு அளவுக்கடங்காதது. முருகனது சம்பாத்யமோ ரூபாய் 15. இருவரும் இளம் வயதுடையவர்கள் பாவம். பட்டணம் வந்து ஆறுவருஷங்களுக்குள் மூன்று குழந்தைகள் பிறந்துவிட்டன. மூத்தவள் 'கண்ணாயி'. அவளுக்கு இரண்டாவது பெண் 'ரோவதை' அவளுக்கு வயது4. மூன்றாவது பிள்ளை 'கந்தன்'. அவனுக்கு வயது மூன்று. நான்காவதாக அஞ்சலை எட்டு மாதப் கருவுற்றிருக்கிறாள்.

* * *

பெண் பிறந்தால் 'இருளாயி' என்றும், பிள்ளை பிறந்தால் 'குப்பன்' என்றும் பெயர் வைக்கவேண்டுமென்று அஞ்சலைக்கு ஆசை. இத்தனை உயிர்களுக்கும் முருகன் கொண்டுவரும் பதினைந்து ரூபா எப்படிப் போதும்? அஞ்சலை ஒரு டாக்டர் வீட்டில் வேலைசெய்து வந்தாள். அதில் மாதம் ஐந்து ரூபாய் கிடைக்கும். பகல் 11மணிக்குப் பிறகு நான்கு உத்தியோகஸ்தர்களுக்குச் சாப்பாடு எடுத்துக்கொண்டு போய்க்கொடுப்பாள். அதில் மாதம் ஐந்துரூபாய் கிடைக்கும். சாப்பாடு எடுத்துக் கொண்டு போய் ஆபீஸில் வேலை செய்வோருக்குக் கொடுத்துவிட்டு மத்தியானம் இரண்டு மணிவரை பனை'நுங்கு' வைத்துவிற்றுவருவாள். ஆபீஸ்குமாஸ்தாக்கள் அனைவரும் அஞ்சலையிடமே வாங்குவார்கள். அஞ்சலை சுத்தமாக இருப்பதே அதற்குக் காரணம். எல்லோருக்கும் மலிவாகவும் கொடுப்பாள்.

* * *

அன்று பாருங்கள்! கஷ்டம் அவள் பங்கி லிருக்கிறது. அஞ்சலை மாத்திரம் ஓரமாக மரத்தடியில் உட்கார்ந்து கொண்டு 'நுங்கு' விற்றுக் கொண்டிருந்தாள். பண்டம் நல்லதாகவும் மலிவாகவும் இருந்தால் கூட்டம் கூடுவது சகஜந்தானே! தூரத்தில் நின்று கொண்டிருந்த போலீஸ்காரனுக்கு இதெப்படியோ கண்ணில் பட்டுவிட்டது. அங்கிருந்து வெகு வேகமாக வந்தான். அஞ்சலை கர்ப்பிணி. சடக்கென எழுந்து எப்படி அவளால் ஓடமுடியும்? அத்துடன் கூட்டம் அவளைச் சூழ்ந்துகொண்டிருக்கின்றது.

* * *

'விற்க! வந்த கழுதே! எத்தனை நேரம் உனக்குச் சொல்வது? ஓடு' என்று சொல்லிக்கையிலிருந்த தடியால் கூடையை ஓங்கி ஒருதட்டுதட்டிக் காலாலும் உதைத்தான்.

* * *

அம்மா! என்று சொல்லிய படியே அஞ்சலை தரையில் சாய்ந்தாள். காரணம் என்ன? அந்தப்பெருந்தன்மை வாய்ந்த 'கருணைக்கடல்' போலீஸ் கான்ஸ்டபிள் உதைத்த உதையைப் பூரண கர்ப்பிணியான அஞ்சலையின் வயிறு பெற்றுக் கொண்டது. நுங்குக் கூடை கூப்பிடு தூரம் போய் வீழ்ந்தது. நுங்கெல்லாம் சிதறியுடைந்து மண்ணாயின.

(தொடரும்)

---

சென்ற செவ்வாய்க்கிழமை சென்னையிலிருந்து புறப்பட்ட 'மகாராஜா' என்ற கப்பலில் வெவ்வேறு குற்றங்களுக்காகத் தண்டனையடைந்த 110 குற்றவாளிகள் அந்தமானுக்கு அனுப்பப்பட்டனர்.



## நாம் செய்ய வேண்டிய தென்ன?

முன்னோர் வாழ்க்கையும் நமதுவாழ்க்கையும்

(திரு. இரா. கு. நல்லகுற்றலம்பிள்ளை)

நம்முன்னோர் உண்மை வாழ்க்கை (True life)யையே வெகுவாய்விரும்பி வாழ்ந்தனர்; நாம் சமர்த்து வாழ்க்கையில் (Clever life) கருத்துச் செலுத்தி வருகிறோம்.

நம்முன்னோர்களின் அறிவும் ஆற்றலும் தனுகரணபுவன போகங்களில் ஒரே படித்தாய் உண்மையாய்த் திகழ்ந்து வந்தன. அவர்கள் உள்ளம் தூய்மையாய் அதினின்றும் பிறக்கும் பேச்சும் செயலும் நற்பயனளித்து வந்தன. அவர்கள் மனைவிமக்கள் உற்றார் உறவினர் நாட்டாரென்றேனும் அயலா ரென்றேனும் வேற்றுமை பாராட்டிவந்ததில்லை. அவர்கள் தங்கள் குற்றங் குறைகளைக்கண்டு நாணியும் போக்கியும் வந்ததாலும், பிறரால் வருவதாக நாம் கருதும் இடஞ்சல்களையும் விதியால் வந்ததாகக் கருதி வந்ததாலும் அவர்களிடம் பொறுமையும் மற்றும் பல நற்குணங்களும் வளர்ந்துவந்தன. எவரையும் தங்களைப்போல்கருதிப் பிறர்கஷ்ட நஷ்டங்களைப் போக்கியும் வந்ததால் உபகாரசிந்தையும் அவர்களிடம் வளர்ந்து வந்தது. அவர்கள் அறநெறி நின்று பிறர் உள்ளங்களி கூரவாழ்வதே பிறவிப்பயனைக் கொண்டும் வெளித்தோற்றங்களில் வீணே தங்கள் கவனத்தையும் முயற்சியையும் பொழுதையும் போக்காமல் தங்கள் தங்கள் நிலைமையில் திருப்தியுடையவர்களாய்த் தங்களுக்கும் பிறர்க்கும் நன்மையாய் வாழ்தலிலேயே ஆன்மசுகம் காணவேண்டுமெனும் பெரு நோக்குடையவர்களாய் வாழ்ந்து வந்தார்கள். அவர்கள் வாழ்க்கைக்கும் வாழ்க்கைப்பயன் துய்த்தற்கும் நிறைகாப்பே தலையாய்நின்றது; சட்டங்கள் வேண்டியிருக்கவில்லை. அவர்கள் வாழ்க்கை முறையிலும் உறவொன்றிற்கே இடமிருந்தது; கொடுப்பது குறைவாயும் கொள்வது நிறைவாயும் இருக்கவேண்டுமென்றேனும் உழைப்பு சிரமத்திற்கும் அதிகமாக ஊதியம் இருக்கவேண்டுமென்றேனும் விரும்புதற்கில்லையாதலால் அவர்கள் வாழ்க்கையில் முதலாளி தொழிலாளி முதல் எவ்விதசண்டை சச்சரவுகளுக்கும் இடமிருந்ததில்லை.

நாம் கருமமே கண்ணாய்ச் சமர்த்தாக வாழ்வதில் வேளாவேளையில்பசியாற்றும் கண்துஞ்சாதும் மெய்வருந்தியும் அருமைபாராட்டாது பிறர்தீமையே மேற்கொண்டு அவமதிப்பே கொள்கின்றோம். இதன் உண்மையைத் தேர்தலுக்காக அலைபவர்கள் அதிலும் தோற்றவர்கள் வெகுவாய் அறிவார்கள்.

சமர்த்து வாழ்க்கையில் ஆணவமும் சுயநலமுமே தாண்டவமாடும்; பேராசையும், பொறாமையும், மார்ச்சரியமுமே வளர்ந்துவரும்; சூதும், வாதும், மோசமும், சூழ்ச்சியுமே குடிகொண்டிருக்கும்; தான்செய்யத்துணியாத குற்றங்களையும் தனக்காகப்பிறரைச் செய்யத்தூண்டும்; குற்றவாளிகளையும் ஆதரிக்கும்; தன் தரத்திற்கும் அதிகமான வீண்டம்பச் செலவுகளுக்கும் ஆளாக்கும். சுயநலத்திற்குப் பாதகமான காரியங்களில் அன்பிற்கேனும் உண்மை நியாயத்திற்கேனும் கொஞ்சமும் இடமில்லை; ஒரோவேளை பேச்சிலும் செயலிலும் அன்பு உறவாடுவதாகத் தோற்றினால் அதுவும் தன்காரியசித்திக்காகப் பிறர் உதவிபெறுவதற்காக, பிறரைப் பிறர் நன்மையைப் பலியிடுவதற்காகப் பிறப்பதாகும்; அவசியம் நேர்ந்தபோது உண்மை பரவவேண்டுமென்றும், நியாயம் வழங்கப்பட வேண்டுமென்றும், பிறர்கஷ்ட நஷ்டங்களைப் போக்கவேண்டுமென்றும், அதற்காகவே தான் சிரமம் பாராது கஷ்ட நஷ்டங்களைக் கவனியாதுவேலைசெய்வதாயும்பிரசாரம் செய்யப்படும். காரியசித்தியாகவும், முன் பேசியன செய்தனவெல்லாம் மறைந்து போம்; நன்றியறிதலென்பதுமிராது; அதைச்சுட்டிக் காட்டினாலும் கேடுசம்பவிக்கும்.

சமர்த்து வாழ்க்கையில் கர்ப்பத் தடைமுறைகளும் பரவும்; ஆடவர்க்குக் காமஇச்சை சமய சந்தர்ப்பநியதியில்லாது நினைத்த மாத்திரத்தில் ஆக்கிரகத்துடன் தோன்றுவதால் அதை அடக்குதற்கான (Passion control) வாழ்க்கை முறையமையாதபோது கர்ப்பத் தடைமுறைகளால் பயனிருக்கக் கூடியதில்லை. ஏழைகள் எல்லாம்கர்ப்பத் தடைமுறைகளைக் கையாடக் கூடியதுமில்லை. அவர்களுக்கே குழந்தைகள் அதிகம் பிறப்பதாயும் அவைகளைக் காப்பாற்றமுடியாது குழந்தைகள் தேகதிடமில்லாமலும் அறிவு விர்த்தி யில்லாமலும் சமுகத்திற்கே பெருங்கேடுவிளைந்து கொண்டிருக்கிறது. இந்தநிலைமையில் நல்லதிடமான குழந்தைகளைப் பெற்று விர்த்தி செய்யக் கூடியவர்களும் கர்ப்பத்தடை முறைகளைக் கையாளுவார்களென்றால் இதைக் காட்டிலும் ஒரு நாட்டிற்கு அநர்த்தம் வேறு வேண்டாம்.

ஒரே குடும்பத்தினர் ஒவ்வொருவரும் பிறர்க்கு நன்மையாயும் கைம்மாறு கருதாதும் நடந்துகொள்வதுபோலவே உலகமெலாம் ஒரே குடும்பமாய் வாழவேண்டும். ஒரு சில நாடுகள் தவிர மற்ற நாடுகளி லெல்லாம் அரசுகளும் அங்கங்களாகிய கல்விச்சாலைகளும் பத்திரிகைகளும் சினிமாநாடகசாலைகளும்—அந்நிய ஆட்சிகளில் தன் தன்னினத்தார் நன்மைக்காகவும் தன்னர சாட்சிகளில் ஆட்சியின் அதிகாரத்திலுள்ள வகுப்பினர்க்காகவும் சமயோசிதம்போல் மறைவாகவும் வெளிப்படையாயும் சமர்த்து வாழ்க்கையைப் போற்றிப் பரப்பி வருகின்றன. ஒவ்வோர் அரசும் அதனதன் குடிகளோடும் பிறநாடுகளோடும் உண்மையாகவும் நன்மை யாகவும்—பாதக மில்லாமலாவது வாழலாம். அப்படிவாழும்போதே உலகமனைத்திற்கும் க்ஷேமமுண்டு.

ஒவ்வொருவரும் ஒவ்வொரு நாடும் உலகமனைத்தும் எப்போதும் உண்மையாய் வாழக்கூடும்; ஒருசிலரே, ஒரு சிலநாடே, அதுவும் சிலகாலமே சமர்த்தாக வாழமுடியும்; பெரிய மீனுக்குச் சிறுமீன் இரையாவதுபோலவே வல்லரசுகளுக்கு மற்ற அரசுகளும், வல்லவர்களுக்கு மற்றவர்களும் இரையாவது திண்ணம்; அதற்குடன் படாதபேர் சண்டையிட்டுக் கெட்டழிவதும் திண்ணம்; என்றாலும், வல்லவனுக்கு வல்லவன் வையகத்திலுண்டு; வல்லரசுகளுக்கும்வல்லரசுகளுண்டு. இப்படியே வல்லரசுகளும் வல்லவர்களும் கெட்டழிந்து போய்க்கொண்டே யிருப்பார்கள். குருக்களைக் கடித்தநாய் புழுத்துச் கொண்டு சாகுமென்றாலும், சமர்த்து வாழ்க்கையில் எளியவர்களும் எளிய அரசுகளும் வேதனை பொறுத்தல் முடியாது.

சமர்த்தாகப் பலரும் பல நாடும் வாழும்போது, ஒருசிலர், ஒரு சில நாடு உண்மையாக வாழ்தல் உசிதமாகுமாவென்று கருதலாம். டேன்மார்க், பின்லண்ட், செக்கோஸ்லேவியா இந்தக் கஷ்டகாலத்திலும் கூடியவரை உண்மை வாழ்வே வாழ்கின்றன. இந்த நாடுகளிலெல்லாம் கோடீசுவரப் பிரபுக்களில்லை யென்றாலும் பசியால் வாடும் ஏழைகளுமில்லை. டேன்மார்க்கில் கடற்சேனை, தரைச்சேனையுமில்லை. இவைகள் அஞ்சுவதுமில்லை; அஞ்சவருவதுமில்லை. ஒருவனுலகமெலாம் செயித்தும் அவனுக்கு மனோசாந்தியில்லையென்றால் அவன் வாழ்வினால் பயனென்ன? சமர்த்துவ வாழ்க்கையால் மனோசாந்தி கொஞ்சமும் ஏற்படக் கூடியதில்லை.

ஆகையால் சமர்த்து வாழ்க்கை நமக்கு வேண்டாம்; நம்நாட்டிற்கும் வேண்டாம்; வேண்டவே வேண்டாம். உண்மைவாழ்வே வாழ்ந்து, உறவு நெறி வளர்த்து இன்புறுவோமாக.

## அரசாளப் பிறந்தவர் பெண்களே!

(கமலம்)

I

மாதர் சமூகம் இப்பொழுது கண் விழித்திருக்கிறது. உலகெங்கும் உரிமைப் போர் நிகழ்கிறது. மேற்குநாட்டுப்பெண்கள், தங்கள் நாட்டிற்கு ஏற்ற முறையில் உரிமைக்கு ஆக்கம் தேடுகிறார்கள். நமது நாட்டுப் பெண்களும் அதை மறத்தலாகாது. நமது நாட்டிற்குத்தகுந்தபடி சுயேச்சைபெற முயலவேண்டும்.

நமது நாட்டில் படித்தபெண்கள் எல்லாரும் உரிமைவேண்டுகின்றார். ஆனால் அவர்கள் அந்த உரிமை எத்தகைய முறையில் வேண்டுமென்பதை அறிவதில்லை.

ஈசுவரன் எல்லார்க்கும் ஒரேவித சக்தியை அளித்திருக்கிறான். பெண்கள் அரசாளப் பிறந்தவர்கள். வீடு அவர்களது ராஜ்யம்; நாடு அவர்களது ராஜ்யம். எதையும் ஒழுங்காக அரசாள்வது அவர்கள் கடமை. அவ்விஷயத்தில் பெண்மக்களுக்குப் பூரணசுதந்திரம் வேண்டும். பெண் ஒருவீட்டின் அரசி; அவ்வீட்டிற்குப் புகழைத் தேடுவது அவள் பொறுப்புஎன்பதை ஆடவர்கள் எப்பொழுது உணர்கிறார்களோ அப்பொழுதுதான் அந்த வீட்டில் மகான்கள் அவதரிப்பார்கள்.

பெண்கள் சக்தி அம்சம். அவர்களைப் பூஜித்துக் கௌரவமாக நடத்த ஆண்கள் கடமைப்பட் டிருக்கிறார்கள். "எந்த வீட்டில் ஸ்திரீகள் பூஜிக்கப்படுகிறார்களோ அந்த வீட்டில் சந்தோஷம் நிலவும்; அந்தவீடு புகழுக்குரியதாகும். எந்தவீட்டில்ஸ்திரீகள் கௌரவமாக நடத்தபடுவதில்லையோ அந்தவீட்டில் ஸ்ரீதேவி தங்கமாட்டாள்" இது ஸ்மிருதி வாக்கியம்.

வேதகாலத்தில் பெண்களை ஆண்கள் கௌரவமாகவே நடத்தி வந்தார்கள். யார்செய்த கொடுமையோ இடைக்காலந் தொட்டு ஆண்கள் பெண்களைக் காமக் கருவிகளென நினைத்தார்கள்; அடிமைகளாக்கினார்கள்; கொடுமைப்படுத்தினார்கள்; எழுபது வயதுக்கிழவனுக்கு எட்டாந்தாரமாக ஏழு வயதுப்பெண்ணைப் பொம்மைக் கலியாணம் செய்து அடிமையாக்கினார்கள். ஏழு வயதுப் பெண் பதினேழுவயது அடைவதற்குள் எழுபது வயதுக்கிழவர் பரலோகம் போய்விடுவார். அப்புறம்கேட்க வேண்டுமா கொடுமையை! பச்சைக் குழந்தையை - பால் மணம் மாறுப்பாலிகையை - பதறிக்கதறிக் கண்ணீர்சிந்த மொட்டையடித்து முண்டையென்று பெயரிட்டு அறிஞர் மூலையில் வைப்பர்; இழித்துக் கூறுவர்; பழித்துப் பேசுவர்; எதிரில் வந்தால் அபசகுனம் என்பர். கொஞ்சக் கொடுமைகளா?

ஒருவன் ஒருத்தியை மணப்பது; பிறகு அவளைத் தள்ளி வைத்துவிட்டு வேறொருத்தியை மணப்பது. இப்படியே ஐந்தாறு பேரை மணப்பது. அத்துடனன்றி ஒரு வாழை மாத்திற்கும் தாலி கட்டுவது? என்ன அநியாயம்! உண்மைச்சாஸ்திரம் படித்த பெரியோர்களே! ஹிந்து தர்மம் இப்படியாகூறுகிறது? கொடுமை; கொடுமை; மோதிரம் மாற்றுவோர் கூடத் தங்கள் வாக்குறுதியைக் காப்பாற்றுகின்றனரே. பழமையான உயர்ந்த ஹிந்து தர்மத்தின் விதிப்படி ஒரு பெண் கையைப் பிடித்து அக்னி சாட்சியாக 'உன்னைக் கைவிடேன்' என்று சத்தியம் செய்த பேடிகளே! நீங்களும் ஆண் மக்களா? அடைக்கலம் புகுந்த பெண்ணை அடிமைப் படுத்துவதா? தள்ளி வைப்பதா? நிஷ்டூரம் செய்வதா? பிள்ளைபெறும் யந்திரமாகச் செய்வதா? ஆகாது. எத்தனை பெண்கள் பெருக்கிய கண்ணீரோ தெரியவில்லை—நமது நாட்டில் மூதேவி வந்தாள்; இலட்சுமி சென்றாள். நம் நாடு சுதந்திரம் பெற வேண்டுமோனால்—சுபிட்சம் தழைக்க வேண்டுமோனால்—பெண்கள் பெருக்கும் கண்ணீர் ஓயவேண்டும்; பெண்கள் கௌரவமாக நடத்தப்பட வேண்டும். பெண்கள் வாழ்க! அவர்கள் கண்ணீர் ஓய்க.

# திருவள்ளுவர் அறவுரை

(திரு. தி. ந. சாரங்கபாணி, எம். ஏ.)



"ஓதற் கெளிதா யுணர்தற் கரிதாகி
வேதப் பொருளாய் மிக விளங்கி"

என்று மாங்குடி மருதனாரும்[1]

"சிந்தைக் கினிய செவிக்கினிய வாய்க்கினிய
வந்த வருவினைக்கு மாமருந்து" [ய

எனக் கவுணியனாரும்[2]

"செய்யா மொழிக்குந்
திருவள் ளுவர்மொழிந்த
பொய்யா மொழிக்கும்
பொருளொன்றே"

என்று வெள்ளிவீதியாரும்[3]

"கடுகைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள்"

என இடைக்காடரும் பெரிதும் போற்றற்குரிய அரிய அறநூலை, இனிய தமிழில் வரைந்து, தமிழகத்தினர் இம்மை மறுமைப் பயன்களும் பிறவாமையு மெய்தி இன்புறவருளிய பொய்யாமொழிப்புலவர் எனப்பண்டைத்தமிழ்ச் சங்கப் புலவர்களும் போற்றிய மாண்புடைய தெய்வத் திருவள்ளுவரைப்பற்றிய ஒரு புத்துணர்வு தமிழர் அகத்தில் நிறைந்து, சென்ற வாரம் தமிழகம் எங்கும் திருவள்ளுவர் விழாவாகப் பரிணமித்தது. திருவள்ளுவரின் திருவிழாவைக் கொண்டாடுங்கால் அவர் அருளிய திருக்குறளைப்பற்றிச் சிந்தித்து, சிறப்பாக அவ்வற நூலில் அவர், கற்றும் அறிவிலாக்கயவராகிய நமக்கறிவுறுத்திய அறவுரைகளை ஆராய்ந்துணர்தல் அமைவுடைத்து.

காரிட்ட மும்மலக் கருவறையுள் கண்ணிலாக் குழவியெனக் கட்டுண்டு தம்மியல்பு மறந்த ஆன்மாக்கள், தம்மியல் போர்ந்து, மும்மல மொழிந்து, அந்தமில் பேரின்பத் தலத்தில் அறிவு மயமாய் இலங்கத் திருவுளங்கொண்ட, "அந்த மாதி" எனப் புலவர் - மெய்யுணர்வுடைய அறிஞர் - முடிவுகட்டியோதிய, அருவமாயிலங்கும் ஆண்டவன், ஆக்கல், அளித்தல், அழித்தல் எனும் முத்தொண்டாற்றக் கருணையால் மூவுருவும்முப்பெயருந்தாங்கி,அவ்வான்மாக்களுக்கு ஐவகையெனும் பூதபேதத்தினால் ஆகிய யாக்கையையும் அதற்கிணங்க ஓரறிவு முதல் ஆறறிவுடன் விளங்கும் ஆற்றலையும் அருளினன். நன்றிது தீதிது எனப்பகுத்தறியும் தெய்வத்தன்மையாம்உள்ளொளியுடன் விளங்கும் ஆறறிவினன், சிந்தையும் மொழியுஞ்செல்லாத் தன்மைத்தாகிய-மும்மல மிழந்து பிறவாத்தன்மையெய்தி அறிவு மயமாய் இலங்கும் ஆன்மாக்கள் பெறுதற்குரிய-பதவியாம் வீட்டைப்பெற விழைதல் அறிவுடைமையாம். மெய்யுணர்வுடைய அறிஞர், எய்துதற்குரிய அப்பதவியை எய்த உறுதியெனக் கோலிய, அறம், பொருள், இன்பம் வீடெனும் பொருள்களுள், வீடென்பது வாக்கும் மனமுங்கடந்த நிலைமைத் தொன்றாதலின், எஞ்சிய முப்பொருள்களின் இயல்பையே நூற்கள் எடுத்தோதும். அம்மரபு பற்றியே திருவள்ளுவரும், தம் அறிவுரைத் திருக்குறளை அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என முப்பகுதிகளாகப் பகுத்தோதியுள்ளார். அவைகளுள் இகபர சுகங்களை நல்கிப் பிறவாமையையும் உடனளிப்பது அறமேயாதலின் அதனை வலியுறுத்தற்கென ஓர் [4]அதிகாரத்தினையும் அமைத்தார். எனவே, திருவள்ளுவருடைய அறவுரை அப்பகுதியிலேயே பொலிகின்றது.

மேலோதிய முப் பொருள்களின் இயல்பும், சாதிமத பேதங்கடந்து திகழும் இயல்பாதலான், அப்பொதுமை நோக்கி, ஏற்புடைக் கடவுளுக்கே வாழ்த்துக்கூறி, இந்நூலைத் தொடங்குங்கால், [5]எல்லா மொழிகளுள்ளும், முதலெழுத்து, அகரமே யாதல்போல் இவ்வுலகும் இறைவனையே முதலாகவுடைத்து என, வலியுறுத்தற்கு, அம்முதலெழுத்தாம் அகரத்தையே இந்நூலின் முதற்செய்யுளின் முதலெழுத்தாக அமைத்திருத்தல் நோக்கற்குரியதொன்றும்.

இனி, ஏற்புடைக்கடவுளுக்கு வாழ்த்துக்கூறி, அடுத்த அதிகாரத்தில் வான்சிறப்போதி-மூன்றாவது அதிகாரத்தில், புலனைந்துமடக்கி, யோகம் பயின்று, மெய்யுணர்வெய்தி, [6]"மற்றெவ்வுயிர்க்குஞ்செந்தண்மை பூண்டொழுகலான்" உலகிற்கு அறமுணர்த்தும் நீத்தாரின் பெருமை யியம்பி, நான்காமதிகாரத்தில் அவ்வறனை வலியுறுத்தி [7]சிறப்பும், செல்வமும் ஈனும் அறத்தை [8]ஒல்லும்வகை ஓவாதே செய்யத்தூண்டி, [9]மனத்துக்கண் மாசிலனாதலனைத்தறம்" எனத் திருவள்ளுவர் அறவியல்பு விளக்கியது சிந்தித்தற்குரியதொன்றும். மனம், வாக்கு, காயம் எனும் திரிகரண சுத்தியே பிறவாமையை யளிக்குமென்பதும், அறிஞர் அருளுடன் கோலிய அறநெறியும், இப்பயன் கருதியேயென்பதும் ஒருதலை. நம்மகத்து நிகழும் எண்ணமே, வாக்காகப் பரிணமித்துச் செயலாகத் திரியுமாதலான், மனத்தூய்மை, தூய வெண்ணங்களையும், தூய வாக்கையும், தூய செயல்களையு மீயுமென்பது பெறப்பட்டது. எனவே, மனத்தூய்மையுறின்வினைய முறையே முரணின்றி நிகழுமாற்றான், மனது தூய்மையுறுதலே அறமாமெனக் கூறி, அறநெறி பற்றி மனம் நற்சிந்தையுடன் நிகழின் [10]"வாழ்நாள் வழியடைக்கும்', என்று பிறவாமையும் வீடு பேறும் எய்துவது திண்ணம் என முடிவுகட்டிக் கூறுகின்றார்.

அறவியல்பும், அவ்வறத்தா னெய்தும் பயனும், வலியுறுத்தி அறஞ்செய்தற்குரிய நிலைகளுள் முதல் நிலையாகிய இல்லறத்தை, இல்லறவியல் எனும் மகுடமீந்து, பதிநான்கு அதிகாரங்களால் விளக்கி, இறுதியில், இல்லறம் வழுவாதார் எய்தும் பயனாகிய புகழை இருபத்து நான்காம் அதிகாரத்தில் வலியுறுத்துகின்றார். இல்லற மின்றேல் துறவற மின்று என்னும் மெய்ம்மையே இவ்வமைப்பால் போதருகின்றது. ஒருவன் இல்லறத்தொழுகாது துறவறமேற்கின்,அவ்வறத்திற்கியைந்த உறுதியின்மையான், அகப்புறப் பற்றறுக்கவொல்லாது, அறத்தின் வழுவி அல்லலுழுவது திண்ணம். இல்லறவின்பநுகர்ச்சியின்றி,துறவறம்பூண்டு இடையிடை உறுதியின்மையால், இல்லற இன்பநுகர்ச்சியின்மேல் அவாவுற்று, இடறி, போலி வேடதாரியாகத் திரிதலானும், இல்லறவின்பம் அளவுடன் நுகர்ந்து வெறுத்துத் துறவறங் கொளல் சால அமைவுடைத்து. துறவறத்திற்குரிய முதலறமாகிய புலனடக்கல், புலன்களை மனத் தூய்மைக்குத் துணையாமாறு அடக்கியாள லல்லால், புலனறிவுகளை அடியுடன் அழித்தலன்று. இல்லறநெறி வழுவாது உறுதியுடன் நிற்றலான் இயல்பாகவே புலனடங்குமென்பதற் கையமில்லை. ஆண்டவனருளப்பட்ட சத்திகள் சீரிய முறையில் கையாளுவதற்கல்லான் அழித்தொழிப்பதற் கன்றென்பது வெள்ளிடைமலை. புலன்களைச் சீரிய முறையில் நெறிவழுவாது அடக்கியாளப் பயில்வதற்கு இல்வாழ்க்கை இன்றியமையாதது.

எனவே, இல்லறத்தை முதலில் விளக்கப் புகுந்து திருவள்ளுவர் [11]அன்பும், அறனுமற்ற இல்வாழ்க்கை இல்லறஞ் செய்தற்குரிய பண்பும் பயனுமுடையதன் றென்பதைப் புகட்டி; [12]தக்க மாண்புடையளாகிய வாழ்க்கைத் துணையுடனும், [13]நன்மக்கட் பேறுடனும், அன்பினால் பிணிக்கப்பட்டு, அதன் வாயிலாகப் பிறவுயிர்களிடத்து அருள் பிறந்தொழுகலே இல்லறமாம் என்பதை வலியுறுத்துகின்றார். [14]அறத்திற்கு அன்பே சார்பாதலான் அன்பு குன்றிய வழி, இல்வாழ்க்கையும் இல்லறமும் இனிது நடைபெறா. அகத்திலரும்பும் அவ்வன்பு வாழ்க்கைத்துணையிடம் காதலாகக் கசிந்து, புதல்வரிடம் வாஞ்சையாக மிளிர்ந்து, பிறரிடம் அருளாக விளங்கி இறுதியில் பகையைக் கொய்து, கொதுமலை அழித்து, [15]நண்பெனுஞ் சிறப்பை யீட்டும். இவ்வன்பொன்றின்மேல், [16]மறுமையு மிம்மையும் இன்பந்தரும் இன்சொல்லியம்பி விருந்தோம்பலும் நன்றிமறவாமையும் [17]சமன்செய்து சீர்தூக்குங் கோல்போலமைந்து நிற்கும் நடுவு நிலைமையும் இயலுமோ ?

மேலும் திரிகாணங்களையும் தீநெறிக்கட் செல்லாது அடக்கியாளும் அடக்கமுடைமை இல்வாழ்க்கைக்கு இன்றியமையாத தொன்றும். [18]ஆமைபோலைந்தடக்கி, மெய்யையும், [19]நாவினால் சுட்டவடு ஆறாதென்னும் மெய்யுணர்வால் மொழியையும், [20]கோபத்தை ஒடுக்கி மனத்தையும் அடக்கவியலாதவன் இல்லறத்தை வழுவின்றி யாற்றலியலாது. அடக்கமுடைமை, [21]பகை, பாவம், அச்சம், பழி என்னும் நான்கு குற்றங்களையுந் தாங்கி இருமையும் இழத்தற்குரிய பிறனில் விழையும் காம மயக்கத்தையும் அழித்து, பொறுமையையும் நல்கி, [22]அழுக்காறிலாத இயல்பையீந்து, வறுமையால் பீடிக்கப்படினும், பிறர்பொருள் விழையாது, புறங்கூறு தொழுகிப் பயனிலமொழியாது காத்துப் பாவஞ் செய்தற்கு அஞ்சுமாறு செய்யும் மாண்புடையது. அஃதல்லான் இல்லறத்தின் சார்பாக ஒளிரும் அன்பு [23]கைமாறு கருதாது, [24]வறியார்க் கொன்றீந்து, அகங்குளிரத் தூண்டும். இவைகளை முறையே அணிவகுத்துரைத்த திருவள்ளுவர் இறுதியில், இல்லறம் வழுவாமை இம்மையிற் [25]புகழைப் பயக்குமெனக் கூறி இல்லறவியலை முடிக்கின்றார்.

மேலோதியவைகளினின்றும் இல்லறத்திற்கு இன்றியமையாத அறங்கள் அன்புடைமை அடக்க முடைமை எனும் இரண்டேயாகும் என முடிவு கட்டிக்கூறலாம். எஞ்சிய வறங்கள் இவைகளுள் அடக்கம் என்பது கூறாமலே விளங்கும். இவ்விரு வறங்களையும் வழுவாது கையாளின் இறுதியில் இல்வாழ்வான் புகழெய்துவன் என்பதும் பெற்றாம். இனித் திருவள்ளுவர் வகுத்த இரண்டாவ தியலாகிய துறவறவியலை ஆராய்வாம்.

அன்பு நெறி பூண்டு, அடக்கமுறையாண்டு, தீவினை யஞ்சி யொழுகிய இல்வாழ்வான், உரிய பருவத்தில் அறிவரும்ப, இருவினையும் பிறப்பெனும் பந்தமுமற, விரதங்களைக் காத்து, மெய்யுணர்வால் இறைவனருளும் மறுமைப்பேறும் வீடும்பெறலே துறவறமாம்.

இல்லறத்தில் இலங்கிய அன்புநெறி துறவறத்தில் எல்லா வுயிர்கள் மேலும் கருணைகொள்ளும் அருள்நெறியாக மாறுகின்றது. தொடர்புபற்றியெழுந்த அன்புஈண்டுத் தொடர்பின்றி இயல்பாய் உதித்தெழும் அருளாக மலர்கின்றது. அருள்நெறி யோம்புவார்க்கு [26]இன்னுவுலகம் புகலும், அதற்குக் காரணமாகிய [27]தன்னுயிரஞ்சும் வினையும் உளவாகாவெனத் திருவள்ளுவர் வலியுறுத்துகின்றார். அவ்வாறு அருள்நெறி பற்றினன், [28]தன்னூன் பெருக்கற்குப் பிறிதூன் கொள்ளவிசையானாதலின் புலால் மறுத்தலெனும் விரதத்தைக் காத்து மனத்தைப்பொறி வழி நீத்து இறைவழி நிற்பத் தவநெறி கொள்வர். இத்தவநெறியின் மாண்பைத் திருவள்ளுவர்,

[29]வேண்டிய வேண்டியாங்
கெய்தலாற் செய்தவ
மீண்டு முயலப்படும்.

என அறிவுறுத்துகின்றார். வீடுபெறெய்தற்குரிய நெறி இத்தவநெறியேயென்பது இதனாற் பெறப்படும். இவ்வதிகாரத்தில் தவக்கோலம் பூண்டார், தவநெறி பூண்டார் இவ்விருவர்க்கு இடையில் மிளிரும் பேதத்தைச்செயல் வாயிலாக வல்லான், வடிவளவையான் கொள்ளத் தவறினென்பதை,

[30]"கணைகொடிது யாழ்கோடு
செவ்விதங்கன்ன
வினைப்படுபாலாற் கொளல்"

என நனி விளக்கல் போற்றற்குரியதொன்றும். எனவே, கூடா ஒழுக்கம் தவநெறி பூண்டார்க்கில்லை யென்பது பெற்றாம். மேலும் கள்ளாமை, வெகுளாமை, இன்னா செய்யாமை, கொல்லாமை எனும் விடயங்களைக் கடந்து, [31]"பொய்யா விளக்கே விளக்கு" என்பதற்கிணங்க, பொய் பேச இசையாது, அருள்நெறி நின்று, இறுதியில் வீடு பயக்குமுணர்வாம் ஞானம் பெறுவர். அந்த ஞானத்தின் பயனால் பேய்த்தேரிற் புனலெனத் தோன்றி மறையும் நிலையற்ற பொருள்களிடத்து வெறுப்புற்று, புறப்பற்றும் அகப்பற்றும் அறுத்தெறிந்து, [32]யானெனதென்னுஞ் செருக்கறுப் [33]பற்றற்றான் பற்றினைப் பற்றி குறையிரப்ப, மெய்யுணர்வெய்துவர் எனவள்ளுவர் குறிக்கிறார்.

அம்மெய்யுணர்வான் [34]"பொருளல்லவற்றைப் பொருளென்றுணரு மருளாணு மாணப்பிறப்பு" எனும் உண்மையுணர்ந்து, [35]வேண்டுதல் வேண்டாமையும், [36]தனக்குவமையுமிலனாகிய, [37]மலர்மிசை யேகிய, [38]எண்குணத்தனும், [39]அறவாழி யந்தணனாகிய, [40]உலகின் முதல்வனை, [41]இருள்சே ரிருவினையுஞ் சேராத விறையாதலானும், இவ்வினையே பிறப்புதற்குக் காரணமாதலானும் அவனடி நாடலே மெய்யுணர்வி னியல்பாதலானும், அவனடி பற்றிக் குறையிறந்து [42]பிறவிப்பெருங்கடல் நீந்துவர் என்பதே திருவள்ளுவர் துணிபு.

இச்சிறு வாராய்ச்சியான், அறம் பொருள் இன்பம் வீடெனும் பொருள்களில் முதல் முப்பொருள்களைப் பற்றியே நீத்தார் நமக்கோதியுளார் என்பதும், அவைகளுள் இம்மை மறுமை சுகத்தையும் வீட்டையும் அளித்தற்குரியது அறமென்பதும், அது இல்லறந் துறவறமென இருவியலுடைத்தென்பதும், இல்லறத்தினின்றே துறவறம் பெறவேண்டுமென்பதும், இல்லறத்துப் பழகும் அன்புடைமையும் அடக்கமுடைமையும் துறவறத்து அருளுடைமையாய் மெய்யுணர்வீந்து இறையடி தேடிப் பிறவாமையை யீயும் என்பதும் பெற்றோம்.

தமிழகமே! திருவள்ளுவரையும், அவர் திருக்குறளையும் போற்றித் தொழு. தமிழர்களே! அத்திருக்குறளின் அறத்துப்பாலை ஓதியுணருங்கள். அன்பு நெறிபற்றி அடக்கமுடைமையை எய்துங்கள் ; அருள் நெறியோர்ந்து மெய்யுணர்வால் ஆண்டவன் அருள் பெற்று, மும்மலம் நீங்கிப் பிறவாமை பெற்று, அந்தமில் பேரின்பத் தலத்தில் அறிவுமயமாய் நாம் இலங்குவது திண்ணம். ஆண்டவன் அருள் புரிக.

43 "அறவாழி யந்தணன்றாள் சேர்ந்தார்க்
கல்லாற் பிறவாழி நீந்த லரிது." [கல்லாற்

[1] திருவள்ளுவ மாலை 24.
[2] " " 51.
[3] " " 23.
[4] அறன்வலியுறுத்தல்.

| | | | |
|---|---|---|---|
| [5] திருக்குறள் | 1. | [10] திருக்குறள் | 38. |
| [6] " | 30. | [11] " | 45. |
| [7] " | 31. | [12] " | 51. |
| [8] " | 33. | [13] " | 60. |
| [9] " | 34. | | |

| | | | |
|---|---|---|---|
| [14] திருக்குறள் | 76. | [22] திருக்குறள் | 161. |
| [15] " | 74. | [23] " | 211. |
| [16] " | 98. | [24] " | 221. |
| [17] " | 118. | [25] " | 236. |
| [18] " | 126. | [26] " | 243. |
| [19] " | 129. | [27] " | 244. |
| [20] " | 130. | [28] " | 251. |
| [21] " | 146. | | |

| | | | |
|---|---|---|---|
| [29] திருக்குறள் | 265. | [37] திருக்குறள் | 3. |
| [30] " | 279. | [38] " | 9. |
| [31] " | 299. | [39] " | 8. |
| [32] " | 346. | [40] " | 1. |
| [33] " | 350. | [41] " | 5. |
| [34] " | 351. | [42] " | 10. |
| [35] " | 4. | [43] " | 8. |
| [36] " | 7. | | |

# குமாரசஞ்சீவினி

(REGISTERED)

## Liver & Spleen Specific

FOR CHILDREN

குழந்தைகளின்

### ஈரல் - குலை - ஜுரக்கட்டி

வியாதிகளுக்கு நிகரற்றது.

வைத்தியர் - அண்ணுமலை முதலியார்,

மயிலாப்பூர், சென்னை.

## சாதன சதுட்டயம்

முத்திமார்க்கத்திற்குரிய அருமையான போதனைகள்

மஹாபாரதத்தில் கூறியிருக்கும் பீஷ்மாசாரியாருடைய பெரிய தகப்பனுர் **தேவாபி** எனும் சீவன் முத்தர், இப்போது இமயமலையில் **மாஸ்டர் குதூமி** என்ற பெயருடன் வீற்றிருக்கின்ருர். இம்மகரிஷி **ஸ்ரீமான் ஜி. கிருஷ்ணமூர்த்தி** அவர்களுக்குச் சிறு வயதில் கனிமொழிகளாகக் கொடுத்த உபதேச போதனைகளுக்கு **ஸ்ரீமான் லெட்பீடர்** அவர்களும் **டாக்டர் அன்னிபெசன்ட்** அம்மையாரும் செய்த வியாக்கியான உரைகள், ஆங்கிலத்தினின்று சாதாரண தமிழ் நடையில் மொழி பெயர்க்கப்பட்டு "சாதன சதுட்டயம்" என்ற பெயருடன் வெளிப்படுத்தப் பட்டிருக்கின்றன.

இந்நூல் இல்லற வாழ்க்கையிலிருந்து கொண்டே நான்கு சாதனங்களைக் கையாள வேண்டிய முறையைக் காட்டுவதோடு தன்னைத் தான் அறியக்கூடிய விசார சாகரமாயுமிருக்கின்றது.

கிரௌன் பக்கம் 520 ; 29 அத்தியாயம் ; உயர்ந்த காகிதம். விலை ரூபா 3.

## திவ்ய ஞான தீபம்

இது, பாழ்வெறி - விகாசமுறை - தேகங்கள் - புனர் ஜன்மநியதி - கர்மநியதி - மரணத்திற்குப்பின் - மார்க்கம் - தியானம் - ஞானசாதனம் - சீவன் முத்தர்கள் - குருநாதனைக் காணும் வழி - சிஷ்யத்வப்படிகள் - ஞானபூமிகள் - முத்தர் நிலைகள் - மாட்சி முதலிய பொருள்கள்பற்றி எளிய தமிழ் நடையில் எழுதப்பட்ட நூல். 330 - பக்கங்கள் கொண்டது. நல்ல பெதர்வெயிட் காகிதத்தில் அச்சிடப்பட்டது. விலை ரூபா 3.

முருகவேள் புத்தகசாலை,
இராயப்பேட்டை, சென்னை.

---

## திருவிளையாடற் புராணம்

### மூலமும் விசேட உரையும்

சஞ்சிகை சஞ்சிகையாக வெளிவருகின்றன

தமிழ் நூல்களிற் சிறந்தன சில, அவைகளுள் ஒன்று, பரஞ்சோதி முனிவர் அருளிய திருவிளையாடற் புராணம். இப்புராணம் சோமசுந்தரக் கடவுள் புரிந்த திருவிளையாடல் அறுபத்து நான்கையும் நன்கு விளக்குவது.

நூலாசிரியராகிய பரஞ்சோதி முனிவர் பல கலையில் வல்லவர் ; பாவலர்; அன்பர். அம்முனிவர், திருத்தக்க தேவர் கல்வியினும், சேக்கிழார் அன்பிலும், கம்பர் கவியிலும் முறையே படிந்து மூழ்கித் திளைத்தவர் என்பது, அவர்தம் திருவாக்குடன் உறவுகொண்டு ஒன்றுபட்டு நிற்கும் நுண்புலவோர்க்கு இனிது புலனுகும். முனிவர் மொழியில் தமிழ் மணமும் சிவ மணமும் கமழ்ந்துகொண்டிருத்தல் வெள்ளிடைமலை.

இத்துணைச் சிறப்பு வாய்ந்த புராணத்துக்குச் சென்னைக் கிறிஸ்துவக் கல்லூரியில் நீண்டகாலம் தமிழாசிரியரா யிருந்தவரும், பேர்பெற்ற உரையாசிரியருமாகிய திருவாளர் - ஈக்காடு - இரத்தினவேல் முதலியார் அவர்கள் பொழிப்புரையும் விசேடமும் எழுதியுள்ளார்கள். அவ்வுரை எவர்க்கும் பயன்படுமுறையில் வரையப்பட்டிருத்தலால், அதைப்பெற்றின்புறத் தற்காலத் தமிழுலகம் விழைந்த வண்ணமா யிருக்கிறது.

திருவாளர் முதலியார் உரை வெளிவந்து பல ஆண்டுகளாயின. அச்சிரிய உரை தற்காலத் தமிழுலகிற்குப் பயன்படும்படி, அதை வெளியிடும் உரிமையை, உடையவரிடமிருந்து யான் பெற்றுள்ளேன். (இதுபற்றிய விவரம் பதிப்புரையில் விளக்கப்படும்.)

பரஞ்சோதி முனிவர் அருளிய மூலமும், இரத்தினவேல் முதலியார் உரையும் கொண்ட பதிப்பு, டெம்மி 8 பக்கமுடைய ஆறு பாரங்கொண்ட சஞ்சிகை சஞ்சிகையாக 1935-ம் ஆண்டு ஜுலை மாதம் முதல் வாரத்திலிருந்து வெளிவந்துகொண்டிருக்கிறது.

அன்பர்கள் உடனே சந்தாதாரர்களாகச் சேர்வார்களாக.

சந்தா விவரம் :

| | ரூ. | அ. |
|---|---|---|
| மாதச் சஞ்சிகை (சென்னைக்கு மட்டும்) .... .... | 0 | 4 |
| புத்தக முழுவதற்கும் - முன்பணம் - சென்னைக்கு .... .... | 5 | 0 |
| ,, ,, ,, வெளியூர்க்குத் தபாற்செலவுடன் .... | 6 | 8 |
| புத்தகம் முற்றுப்பெற்றபின் .... .... ... | 8 | 0 |

சுமார் 25 சஞ்சிகையில் புத்தகம் முற்றுப் பெறலாம்.

7 சந்தாதாரர்களைச் சேர்த்தனுப்புவோர்க்கு ஒரு சஞ்சிகை அதிகமாக அனுப்பப்படும்.

திரு. வி. உலகநாத முதலியார்,
முருகவேள் புத்தகசாலை,
12, கணபதி முதலி தெரு, இராயப்பேட்டை, சென்னை.

## அரிய தமிழ் நூல்கள்

| | ரூ. | அ. |
|---|---|---|
| கந்தபுராணச் சுருக்கம் (மூலமும் பொழிப்புரையும் விருத்தியும்) | 3 | 0 |
| முருகவேள் பனுவல் திரட்டு .... .... .... | 1 | 0 |
| திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம் முதல் திருமுறை (அரும் பத வுரையும் சாத்திரக் குறிப்பும்) .... .... | 0 | 12 |
| முருகன் திருவருட்பா .... .... .... | 0 | 8 |
| தேவி தோத்திர மஞ்சரி .... .... .... | 0 | 4 |
| குசேலோபாக்கியானம் (மூலமும் அரும்பத உரையும்) .... | 1 | 4 |
| விநாயகர் பனுவல் திரட்டு .... .... .... | 0 | 6 |
| திருப்போரூர்ச் சந்நிதிமுறைத் திரட்டும், அரும்பத உரையும் கிளேஸ் .... .... .... .... | 0 | 3 |
| ஷை ரப் .... .... .... .... | 0 | 1½ |
| சிவபுண்ணியத் தெளிவு .... .... .... | 0 | 3 |
| சிவாலய பூஜை விளக்கம் .... .... .... | 0 | 1 |
| சமயத்தொகுதி ... ... .... .... | 0 | 2 |
| தாயுமான சுவாமிகள் பாடல் .... .... .... | 0 | 4½ |

## கந்தர் அநுபூதி

சென்னை, இராயப்பேட்டை வேதப்ரவசன பந்திரத்து
சிவத்தியாஞனந்த மஹரிஷி யவர்கள் எழுதிய
**கூடார்த்த தீபிகை**

என்னும் புத்துரையோடு கூடியது. இதுவரை இவ்வகைத் தெளிவான அநுபூதிஉரை வெளிவரவில்லையென்று படித்தோர்பலரும் கொண்டாடிக் கூறியுள்ளார். விலை ரூபா 1.

### சைவ சித்தாந்த மகா சமாஜப் பதிப்புகள்

| | ரூ. | அ. |
|---|---|---|
| அப்பர் தேவாரம்—அரும்பொருளகராதியுடன் ... ... | 1 | 0 |
| சுந்தரர் தேவாரம்—குறிப்புரையுடன் ... ... | 0 | 12 |
| திருவாசகம் ... ... ... ... | 0 | 2½ |
| திருவாசகம் (மூலமும் உரையும்) ... ... ... | 3 | 0 |
| திருமூலர் திருமந்திரம் ... ... .... | 1 | 0 |
| பதினொராந் திருமுறை ... ... ... | 0 | 11 |
| சித்தாந்த சாத்திரம் பதினன்கு (மூலமும் உரையும்) ... | 3 | 0 |
| சிவஞானசித்தியார் (மூலமும் உரையும்) .... .... | 0 | 12 |
| மெய்கண்டாரும் சிவஞான போதமும் .... .... | 1 | 0 |
| திருப்புகழ் (அருணகிரியார் அருளிய நூல்கள் முற்றுமடங்கியது) | 3 | 0 |
| சங்கநூற் புலவர்கள் பெயர் அகராதி .... .... | 0 | 2½ |

முருகவேள் புத்தகசாலை,
12, கணபதிமுதலி தெரு, இராயப்பேட்டை, சென்னை.

Printed at the Sadhu Press: Published by T. V. Kalyanasundaran (Editor) 12, Ganapathi Mudali Street, Royapettah, Madras.

